# BALAVACHAKAM

## FOURTH BOOK

(TAMIL)

VIDWAN

R. MEENAKSHISUNDARAM

*Lecturer in Tamil, St. Joseph's School, Trichinopoly*




APPROVED BY THE TEXT - BOOK COMMITTEE

(*Vide Gazette, dated 10th May 1938, Page 193*)

(*Reprinted in 1939*)

MADRAS:

C. COOMARASAWMY NAIDU & SONS

1939

 [Price 4½ As.

# பால வாசகம்

## (நான்காம் வகுப்பு)

திருச்சிராப்பள்ளி செய்ன்ட் ஜோஸப்
கலாசாலைத் தமிழாசிரியர்
வித்துவான் - R. மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை
எழுதியது




துரைத்தனத்தார் அங்கீகரித்தது
[2-5-'39 கெஜட் 207-ஆம் பக்கம் பார்க்க]
(*Reprinted in 1939*)

சென்னை:
ஸி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ்
1939

ரெஜிஸ்தர் செய்தது]     [விலை 4½ அணா

# பொருள் அடக்கம்




| எண் | விஷயம் | பக்கம் |
| --- | --- | --- |
| 1. | பாணனும், எலியும் | 1 |
| 2. | தவளை ராஜன் | 5 |
| 3. | இராமன் | 9 |
| 4. | காவேரியாறு | 14 |
| 5. | முனிவரும், நாயும் | 16 |
| 6. | பனைமரம் | 20 |
| 7. | துருவன் | 22 |
| 8. | உண்மை | 27 |
| 9. | பாம்புகள் | 29 |
| 10. | கூட்டுறவுச் சங்கம் - I | 32 |
| 11. | சங்கத்தின் உபயோகம் - II | 36 |
| 12. | நன்றியுள்ள வேலைக்காரன் | 38 |
| 13. | பருவங்கள் | 41 |
| 14. | மரியாதை ராமன் | 43 |
| 15. | குமணன் | 46 |
| 16. | பாடகன் | 50 |
| 17. | சாலிவாகனன் | 53 |
| 18. | யானை | 56 |
| 19. | பொறுமை | 60 |

| எண் | விஷயம் | பக்கம் |
|---|---|---|
| 20. | தேசிங்கு ராஜன் | 62 |
| 21. | ஔவையார் | 65 |
| 22. | தண்ணீர் | 68 |
| 23. | தேகப் பயிற்சி | 70 |
| 24. | வாத்து | 73 |
| 25. | காற்று | 75 |
| 26. | அதிவீரராம பாண்டியன் | 78 |
| 27. | காகிதம் | 81 |
| 28. | மயில் | 84 |
| 29. | தமிழ்நாடு | 87 |
| 30. | பயிர்த் தொழில் | 89 |
| 31. | கிராமபோன் | 93 |
| 32. | உலோகங்கள் | 96 |
| 33. | நல்ல சிநேகம் | 100 |
| 34. | புலி | 103 |
| 35 | கடிதம் | 107 |
| 36. | செய்யுள் பாடம் | 109 |
| — | **வெற்றி வேற்கை** | ,, |

# பால வாசகம்

## (நான்காம் வகுப்பு)

---

### I. பாணனும், எலியும்

நெடுங் காலத்திற்கு முன் சோழபுரம் என்று ஓர் ஊர் இருந்தது. அந்த ஊரைச் சிங்கவர்மன் என்ற ஓரரசன் ஆண்டுவந்தான். அந்த ஊரில் எலிகளுடைய துன்பம் அதிகமாயிருந்தது. கடைகளிலும், வீடுகளிலும், சோலைகளிலும், பாடசாலைகளிலும் எலிகள் அதிகமாயிருந்தன. அவ்வெலிகள் வீடுகளிலுள்ள தானியங்களையும், கடைகளிலுள்ள சரக்குகளையும் அழித்து விடும். உண்ணும் உணவுப் பொருள்களை எல்லாம் தின்றுவிடும்.

அந்த எலிகள் நாய்களுக்கு அஞ்சா. சிறு பிள்ளைகளையும் கடிக்கும். இராப் பகல் என்றில்லாமல் எப்பொழுதும் எங்கும் திரியும்.

இத்துன்பத்தைக் கண்ட ஊரார், தப்ப வழி யறியாது திகைத்தனர். அதைக் கண்டு அரசனும் துக்கித்தான்.

அவர்களுக்கு இரவில் தூக்கம் பிடிக்காது. பகலில் உணவு செல்லாது. எப்பொழுதும் ஆலோசித்துக்கொண்டே இருப்பார்கள். ஒரு நாள் அதிசயமான உடைதரித்த ஒருவன் அங்கு வந்தான். அவனுடைய சிறிய கண்களையும், சிவந்த மீசையையும், வளைந்த மூக்கையும், மெலிந்த உடலையும் பார்க்க யாவருக்கும் ஆச்சரியமா யிருந்தது. அவன் கையில் ஒரு வாத்தியக் குழலிருந்தது. மற்றென்றும் இல்லை. அவன் அவ்வூர் அரசனை அடைந்தான். அப்பொழுது அரசன் அவனைப் பார்த்து, "நீ எலிகளின் துன்பத்தை தீர்ப்பாயா?" என்று கேட்டான். அதற்கு அவன் "பூமியில் வாழும் பிராணிகள், வானில் பறக்கும் பறவைகள், நீரில் வாழும் உயிர்கள் முதலிய எந்தப் பிராணிகளையும் என் பின்னே வரச் செய்வேன்; எலிகளின் துயரத்தைப் போக்குவது பெரிதல்ல" என்றான்.

அரசன் "அப்படியானால் நீ என்ன கேட்கிறாய்?" என்றான். அதற்கு அவன் "ஆயிரம் வராகன் தரவேண்டும்" என்றான். அரசனும் அதற்குச் சம்மதித்தான். அதைக் கேட்ட

உடனே அந்த ஆச்சரியமான மனிதன் தனது வாத்தியக் குழலை எடுத்து வாயில் வைத்து ஊதத் ஆரம்பித்தான். அவ்வொலியைக் கேட்ட வுடனே எல்லாப் பக்கங்களிலும் இருந்த எலி கள் எல்லாம் கூட்டம் கூட்டமாய் அவனிடம்



வந்து சேர்ந்தன. கிழ எலி, சுண்டெலி, பெண் எலி, ஆண் எலி, பருத்த எலி, மெலிந்த எலி என்ற பலவகைப்பட்ட எலிக ளெல்லாம் அவனைத் தொடர்ந்து சென்றன.

அவன் அவ்வெலிகளைத் திரும்பிப்பார்க்காமல் வாத்தியக் குழலை ஊதிக்கொண்டே சென்று ஆற்றில் குதித்தான். அந்த எலிகளும் அவன் பின்னே சென்று ஆற்றில் வீழ்ந்து மூழ்கிப் போயின. அதைக் கண்ட ஊரார் அனைவரும் அதிகமாகச் சந்தோஷித்தார்கள்.

கடைசியில் அப் புதியமனிதன் அரசனிடம் சென்று, அவன் கொடுப்பதாகச் சொன்ன ஆயிரம் வராகனையும் கேட்டான். அரசன் அதைக் கேளாதவன் போல் இருந்தான். மந்திரியும் வாய்திறவாது பேசாமல் இருந்தான். அங்கிருந்தார் அனைவரும் அவனைக் கவனிக்கவில்லை. அதைக் கண்ட புதிய மனிதன் மிகுதியும் கோபங் கொண்டான். அந்த மூர்க்கர்களுக்குப் புத்தி புகட்ட எண்ணித் தன் வாத்தியக்குழலை எடுத்து வேறுவிதமாக ஊதினான். அந்தக் குழலோசையைக் கேட்டவுடனே அவ்வூரிலிருந்த பிள்ளைகளெல்லாம் வந்து அவனைச் சுற்றிக்கொண்டனர். அதைப் பார்த்த பெரிய மனிதர்களெல்லாரும் பயந்தார்கள். என்ன நேரிடுமோ என்று ஏங்கி அம்மனிதனைப் பார்த்து, முன்னிலும் இரட்டிப்பாகக் கொடுப்போம் என்றார்கள். அதை அவன் செவியில் கொள்ளவில்லை. அவன் தன் குழலை வாசித்துக் கொண்டே அவ்வாற்றின் வழியே

சென்ருன். ஆ! அக்குழலோசையின் மகி மையை என்னென்போம். யாவரும் இருந்த இடத்திலே அசைவற்று இருந்துவிட்டார்கள்.

அவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதே அவனும் அவனைச் சூழ்ந்து சென்ற பிள்ளைகளும் தூரத்தில் இருந்த மலைக் குகையில் நுழைந்து மறைந்து போயினர்.



## 2. தவளை ராஜன்

வங்க தேசத்தில் கீர்த்தியாளன் என்ற ஓரரசன் இருந்தான். அவனுக்கு மஞ்சரி என்ற ஒரு குமாரி இருந்தாள். அவள் அழ கைப் பார்த்து யாவரும் வியந்தனர். அவளைப் புகழ்ந்து கொண்டாடாதார் ஒருவரு மிலர். நெடுங்காலம் பிள்ளை யில்லாதிருந்து அவள் பிறந்தாள். ஆதலால் அவளது தாய் தந்தை யர் அவளை மிகப் பிரியமாய் வளர்த்து வந் தார்கள்.

மஞ்சரிக்குச் சிறு வயதிலிருந்து பந்தாட் டத்தில் மிகப் பிரியமுண்டு. அவள் ஒரு நாள் சிங்காரவனத்துக்குச் சென்று பந்தாடிக்கொண் டிருந்தாள். அப்பொழுது அந்தப் பந்து அருகே யிருந்த ஏரியில் விழுந்துவிட்டது.

அப்பொழுது அதை எடுத்துக் கொடுப்பவர் ஒருவருமில்லை. ஆதலால் அப்பெண் அப் பந்துக்காக அழ ஆரம்பித்தாள்.

அச்சமயத்தில் அந்த ஏரியிலிருந்து ஒரு தவளை வெளியே வந்து "பெண்ணே! ஏன் அழுகிறாய்?" என்று கேட்டது. மஞ்சரி "ஏ



தவளையே! என் பந்து இந்த ஏரியில் விழுந்து விட்டது. அதை எடுக்க முடியவில்லை. நீ தயைசெய்து அப் பொற்பந்தை எடுத்துக்

கொடுத்தால் உனக்கு வேண்டியதைக் கொடுப் பேன்” என்றாள்.

அதற்கு அத் தவளை, எனக்கு ஒன்றும் வேண்டாம். “என்னைக் கல்யாணம் செய்து கொள்ள நீ சம்மதித்தால் உனது பந்தை எடுத்துத் தருவேன்” என்றது. ராஜகுமாரி அப் பந்தின் மீதுள்ள ஆசையால் முன்பின் எண்ணாமல் அதற்குச் சம்மதித்தாள். உடனே அந்தத் தவளை ஏரியில் மூழ்கி அப் பந்தை எடுத்துக் கொண்டுவந்து கொடுத்தது.

ராஜகுமாரி கைக்குப் பந்து அகப்பட்ட வுடனே அதிசீக்கிரமாய் அந்தப்புரத்திற்கு ஓடிவிட்டாள். அதைக் கண்ட தவளை, அரச குமாரி மோசம் செய்ததற்காக அதிகக் கவலைப் பட்டுக்கொண் டிருந்தது. பின் எப்படியோ அத் தவளை மாளிகையுள் பிரவேசித்து அவ ளைக் கண்டு தன்னை மணந்துகொள்ளும்படி பிடிவாதம் செய்தது.

அவள் மறுமொழி சொல்ல வகையறி யாமல் திகைத்துக்கொண் டிருந்தாள். அப் பொழுது அங்கு வந்த அவளது தகப்பன் அந்தச் சமாசாரம் அனைத்தையும் கேட்டான். பின் அரசன் மகளைப் பார்த்துச் “சொன்ன சொல் தவறுவது நியாயமாகுமா? எதையும் ‘இது ஆகும், இது ஆகாது’ என்று முன்ன

தாகவே ஆலோசித்துச் சொல்ல வேண்டும். அப்படிச் சொன்னால், பிறகு எப்படிப்பட்ட துன்பம் வரினும் அதை நிறைவேற்ற வேண்டும்; சிறிதும் பின்னிடக்கூடாது. சொன்ன சொல் தவறாத குணத்தினால் அல்லவா அரிச்சந்திரனுடைய புகழ் இன்னும் பூமியில் நிலை பெற்றிருக்கின்றது. உத்தமர்கள் எப்பொழுதும் சத்தியத்தினின்றும் தவற மாட்டார்கள். இது உத்தமர்களுடைய இலக்கணம். உண்மையோடு இருப்பவர்கள் கடவுள் உதவியைப் பெறுவார்கள். ஆதலால் நீ இந்தத் தவளையை மணம் செய்துகொள்வதே தருமம்" என்றான்.

மஞ்சரியும் தந்தை சொல்லுக்கு மாறு சொல்லாமல் அத் தவளையை மணம் செய்து கொள்ள மனம் இசைந்தாள். அரசனும் நல்ல நேரத்தில் தனது அருமை மகளைத் தவளைக்கு மணம் செய்து கொடுத்தான். அதைக் கண்ட ஜனங்கள் ஆச்சரியமுற்றனர். அந்தத் தவளையும் ஒரு அழகான அரச குமாரனாய்த் தோன்றினது.

அப்பொழுது அவ்விராஜ தம்பதிகளுக்கு இருந்த களிப்பை யார் அளவிட்டுரைக்க முடியும்? ஊரிலுள்ளவர்கள் யாவரும் மிகுந்த சந்தோஷமாக இருந்ததனால் மஞ்சரிக்கு அவ்வூர் சுவர்க்க லோகம்போல் விளங்கிற்று.

அரசனும் கிழவனுதலால் மருமகனுக்குத் தனது பட்டத்தைச் சூட்டினுன். மஞ்சரியும் தனது நாயகனேடு இனிது வாழ்ந்திருந்தாள்.



# 3. இராமன்

முன் காலத்தில் தசரதன் என்ற அரசன் ஒருவன் அயோத்தியில் அரசு செய்து கொண்டிருந்தான். அவனுக்குக் கோசலை, கைகேயி, சுமித்திரை என்று மூன்று தேவிமார் இருந்தனர். வயது சென்ற காலத்தில் அவ் வரசனுக்கு நான்கு பிள்ளைகள் பிறந்தார்கள். இராமன் கோசலையினுடைய குமாரன், பரதன் கைகேயியினுடைய குமாரன், இலக்குமணனும் சத்துருக்கனும் சுமித்திரையின் குமாரர்கள் ஆவர்.

இவர்கள் நால்வரும் கல்வியறிவோடு வினயமும் சற்குணங்களும் மிகுதியும் நிரம்பப் பெற்றிருந்தார்கள். இராமன் எப்படி வயதில் பெரியவனே அப்படியே குணங்களிலும் சிறந்தவன். அவனது சிறந்த குணங்கள் இவ்வளவென்று சொல்லமுடியாது. அவன் எப்பொழுதும் உண்மையையே பேசுவான்; கனவிலும் பொய் சொல்லி அறியான்.

எந்த உயிருக்கும் உதவியே செய்வான். சிறிய எறும்புக்குங் கூடத் துன்பம் செய்யான். யாவரோடும் வெகு இனிமையாகப் பேசுவான். துஷ்டர்களைத் தண்டிக்காமல் விடமாட்டான்.

இராமன் கௌசிக முனிவரோடு மிதிலைக்குச் சென்று சீதையை மணஞ் செய்துகொண்டான். தசரதன் தனக்கு வயது சென்றுவிட்டதால் இராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்ய நினைத்தான். அந்த எண்ணத்தை மற்றவர்களுக்கும் தெரிவித்தான். அதற்கு யாவரும் சம்மதித்தார்கள். அரசன் அளவு கடந்த ஆனந்தங் கொண்டு வசிஷ்டரை அழைத்துப் பட்டாபிஷேகத்திற்கு ஒரு நல்லநாள் பார்க்கச் சொன்னான். பட்டாபிஷேகத்திற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்ய மந்திரிகளுக்குக் கட்டளை யிட்டான். இவற்றை எல்லாம் கேட்ட இராமனுக்கு எவ்வளவு மகிழ்ச்சி இருந்திருக்கும்?

நகரெங்கும் அழகாக அலங்கரிக்கப் பெற்றிருந்தது. அப்பொழுது ஒரு கூனி அதைத் தெரிந்து வழியிற் போகின்றவர்களை விசாரித்தாள். அப்பொழுது அவர்கள் "ஐயோ மந்தரையே! நீ ஒன்றும் அறியாயா? நாளை இராமனுக்குப் பட்டாபிஷேகம் அல்லவா?" என்றார்கள்.

மந்தரை கைகேயியின் தோழி. அவளுக்கு அவ் வார்த்தைகளைக் கேட்கச் சகிக்கவில்லை. உடனே கைகேயியினது மாளிகைக்கு விரைந்து சென்று பட்டாபிஷேகத்தைக் கைகேயிக்கு அறிவித்தாள். "நீ பரதனது நன்மையை விரும்பவில்லையா ? நாளை இராமனுக்குப் பட்டாபிஷேகமாமே. இராமன் முடிதரித்தால் உனக்கும் உனது மகன் பரதனுக்கும் என்ன பயன் ? நீ இராஜ கன்னிகை அல்லவா ? பரதன் ராஜ குமாரன் அல்லவா ?" என்று போதித்தாள்.

"கரைப்பார் கரைத்தால் கல்லும் கரையும்" அல்லவா ? மந்தரையினுடைய சொற்கள் கைகேயியினுடைய நல்ல மனத்தையும் கெடுத்து விட்டன. 'ஆதலால், கைகேயி அரசனைப் பார்த்து, இராமனைக் காட்டிற்கு அனுப்ப வேண்டும், பரதனுக்குப் பட்டம் சூட்ட வேண்டும் என்று நிர்ப்பந்தித்தாள். முன் தனக்குக் கொடுத்திருந்த இரண்டு வரங்களையும் நிறைவேற்ற வேண்டும் என்று பிடிவாதம் செய்தாள்.

தசரதன் சொன்ன சொல் தவறாதவன். கைகேயியினுடைய சொற்கள் அவனது உயிர்க்கு யமனாயின. தன் தேவியை அதிகமாக வேண்டிக் கொண்டான் ; பயமுறுத்தினான். அரசன் என்ன சொன்னாலும் அவள் தான்

பிடித்த பிடியை விடவில்லை. பாவம்! அரசன் துயரம் பொறுக்க முடியாமல் மூர்ச்சித்துக் கீழே விழுந்தான்.

மறுநாள் ஜனங்கள் நகரெங்கும் நிறைந்திருந்தார்கள். அரசன் சபைக்குச் செல்லவில்லை. மந்திரி சுமந்திரன் அரண்மனைக்குச் சென்று கைகேயியினது மாளிகையை அடைந்தான்; அரசன் தன்னிலை கெட்டு வீழ்ந்து கிடத்தலைக் கண்டான். கைகேயி இராமனை அழைத்து வரும்படி மந்திரியிடம் சொன்னாள். சுமந்திரனும் இராமனைக் கூட்டிக் கொண்டு வந்தான். இராமன் ஆத்திரத்தோடு தந்தைமேல் வீழ்ந்து "ஐயனே! என்ன உத்தரவு" என்றான். தசரதனுடைய கண்ணீர் ஆறுபோல் பெருகிற்று. துக்கத்தால் பேச முடியவில்லை.

கைகேயி இராமனைப் பார்த்து, "இராமா! நீ காடு செல்லவேண்டுமென்பது உனது தந்தையின் எண்ணம். அதைச் சொல்ல அவர் வருந்துகின்றார்" என்றாள்.

இராமன் கைகளைக் கட்டிக் கொண்டு "அம்மா! இந்தச் சிறிய வேலைக்குத்தானா தந்தை விசனிக்கின்றார்?" என்றான். "எனது அருமைத் தம்பி பரதனே இராச்சியம் ஆளுவான்" என்று முகமலர்ச்சியுடன் மொழிந்தான்.

ஆகா! இராமனது உத்தம குணந்தான் என்னே! இராமனும் தாய் கூறியபடி பதினான்கு வருடம் காட்டில் வசித்துப் பிறகு அயோத்தியை அடைந்து முடி தரித்து இனிது வாழ்ந்திருந்தான்.



## 4. காவேரியாறு

தென்னிந்தியாவில் இருக்கின்ற பல புண்ணிய நதிகளில் காவேரியாறு முதன்மையானதென்று பாராட்டப் படுகிறது. இந்த நதியைத் தக்ஷிண கங்கை என்றும் கூறுவர்.

இந்த ஆறு குடகு ராச்சியத்திலுள்ள பிரமகிரியில் தலைக்காவேரி என்னுமிடத்தில் உற்பத்தியாகிறது. முதலில் மைசூர் ராச்சியத்துக்குள் பிரவேசித்து, இரண்டு கிளைகளாகப் பிரிகிறது. அவ்விரண்டு கிளைகளினிடையே ஸ்ரீரங்கப்பட்டணம், சிவசமுத்திரம் என்ற இரண்டு தீவுகள் உண்டு.

இந்தச் சிவசமுத்திரம் என்னும் இடத்தில் இந் நதி மிகவும் உயரமான இடத்திலிருந்து கீழே விழுகிறது. இந்த நீர்வீழ்ச்சியைக் கொண்டு மைசூர் அரசாங்கத்தார் மின்சார சக்தியை உண்டுபண்ணி, பல காரியங்களுக்கு உபயோகப் படுத்துகின்றார்கள்.

அப்பால் இந்த ஆறு சில குன்றுகளைக் கடந்து சேலம் ஜில்லாவில் பிரவேசிக்கின்றது. அவ்விடத்தில் நமது சென்னை மாகாணத்தார் மேட்டூர் என்னும் இடத்தில் ஒரு பெரிய அணைக்கட்டு கட்டி யிருக்கிறார்கள். இந்த அணைக்கட்டினால் பல ஊர்கள் நீர் வளப்பம் உள்ளதாயிற்று.

பின்னர் இந்த ஆறு திரிசிராப்பள்ளிக்குச் சமீபத்தில் இரண்டு கிளைகளாகப் பிரிகிறது. இதன் வடகிளைக்குக் கொள்ளிடம் என்றும், தென்கிளைக்குக் காவேரி என்றும் பெயர். இந்த இரண்டு கிளைகளுக்கும் இடையில் ஸ்ரீரங்கம் என்ற ஒரு தீவு இருக்கிறது. இந்த நகரம் பூலோக வைகுண்டம் எனப்படும். இங்கு ஒரு பெரிய வைணவ கோவில் உண்டு. இந்தக் கோவிலில் திருமால் பள்ளிகொண்ட கோலமாக விளங்குகிறார்.

இந்நதி கிழக்கே செல்லச் செல்ல, பல சிற்றாறுகளாகப் பிரிந்து, தஞ்சாவூர் ஜில்லாவைச் சேர்ந்த சீர்காழித் தாலுக்காவில் உள்ள காவிரிப்பூம் பட்டினம் என்னும் கிராமத்துக்கு அருகில் வங்காளக் குடாக் கடலில் சங்கமமாகின்றது. இவ்வாற்றில் இன்னும் சில அணைக்கட்டுகளும் உண்டு. இவ்வாற்றின் கரையிலுள்ள முக்கிய பட்டணங்கள் திருவையாறு,

கும்பகோணம், மாயவரம் முதலியன. இந்தக் காவேரியினது முக்கிய உபநதிகள் பவானி, நொய்யல், அமராவதி என்பனவாம். இவ் வாற்றின் நீளம் **475** மைல். இவ்வாற்றில் ஆடி மாதத்தில் வெள்ளம் வரும். ஆடி மாதம் பதினெட்டாந் தேதியில் ஜனங்கள் எல் லோரும் இவ்வாற்றுக்குச் சென்று நதியைப் பூசித்துச் செல்வார்கள். இது ஒரு சிறந்த பண்டிகையாகும்.



## 5. முனிவரும், நாயும்

ஒரு காட்டில் முனிவ ரொருவர் தவம் செய்துகொண் டிருந்தார். அவரது உடம்பு அக்கினிபோல் பிரகாசிக்கும். ஆதலால் யாவ ரும் அவரை அக்கினி முனிவர் என்பார்கள். அவர்,'உலகமெல்லாம் கடவுளுடைய குடும்பம்; உயிர்க ளெல்லாம் கடவுளுடைய பிள்ளைகள்" என்று பாவிப்பார். எல்லா உயிர்களையும் சகோதரமாக எண்ணுவார். எந்த உயிருக் காவது சிறிதும் தீங்கு செய்யமாட்டார். எல் லாரிடத்திலும் மிருந்த அன்புடையவர்.

மரத்திலிருந்து கனிந்து விழுந்த பழத் தையே அவர் எடுத்து உண்பார். ஒரு இலை யைக் கிள்ளினாலும் அது வருந்தும் என்பது

அவருடைய எண்ணம். அவர் மிகுந்த கருணையுடையவர். அதனால் அக்காட்டில் வாழும் கொடிய மிருகங்களும் அவரிடத்தில் சிநேகமாய் இருக்கும்.

அவர் இருந்த காட்டில் ஒரு நாய் இருந்தது. அது எப்பொழுதும் அந்த முனிவரிடமே இருக்கும். அது அவரிடத்தில் மிகவும் விசுவாசமா யிருந்தது. உணவை தேடும் சமயத்தில் மாத்திரம் வெளியே செல்லும்.



மற்ற நேரங்களில் ஆச்சிரமத்தை விட்டு அகலாது. இப்படிப்பட்ட நாயினிடத்து அம் முனிவருக்கு அன்பு அதிகமிருக்கும் அல்லவா ?

ஒருநாள் ஒரு புலி எங்கும் இரை கிடைக்காது பசியால் அந்த நாயைக் கடிக்க வந்தது. அந்த நாய் வாலை வளைத்துப் பல்லைக் காட்டிக் கொண்டு முனிவர் மறைவில் வந்து ஒளிந்தது. அதைக் கண்ட முனிவரும் தனது தவமகிமையால் அந்த நாயைப் புலியாக்கினர். அப்புலியைக் கண்டதும், பசித்துவந்த புலி பயந்துகொண்டு ஓடிவிட்டது.

சிலநாளைக்குப் பின் வேறு ஒரு பெரும் புலி வந்து இதைத் துரத்தியது. அதைக் கண்ட முனிவர் அப்புலியைப் பெரும்புலியாக்கினர். இந்தப் புலியை ஒரு சமயத்தில் யானை ஒன்று வந்து விரட்டியது. அதைக் கண்ட முனிவர் அதை யானையாக்கினர். சில நாள் கழித்து அந்த யானையைச் சிங்கமொன்று கொல்ல வந்தது. அதைக்கண்ட முனிவர் யானையைச் சிங்கமாக்கினர். இந்த மிருகேந்திரனுக்குங்கூட ஒரு சமயத்தில் சரபத்தால் கஷ்டம் வந்தது. அதைப் பார்த்த முனிவர் அச்சிங்கத்தையும் சரபமாக்கினர்.

அப்பொழுது அம்மிருகத்திற்குப் பகை என்பதே இல்லாமல் போயிற்று. அது எங்கும் பயமின்றித் திரிந்தது. அதைக் கண்ட காட்டு விலங்குகளெல்லாம் பயந்தோடும். அதன் ஓசையைக் கேட்டாலும் நடுநடுங்கும்.

அந்த மிருகமாகிய நாய், தான் அடைந்த பெரிய நிலையை எண்ணிச் செருக்குற்றது.

அப்போது அந்தச் சரபம், "முனிவர் மிகவும் கருணையுடையவர். என்னைப்போல மற்றொரு மிருகம் இவரை அடைக்கலம் புகுந்தால் இவர் அதையும் இப்பதவிக்குக் கொண்டு வருவார். அப்பொழுது எனது பாடு என்னாகும். அப்படி நேரிடுவதற்கு முன்னே இக்கிழவனைக் கொன்றுவிட்டால் நாம் பயமின்றி வாழலாம்" என்று எண்ணி முனிவரை விழுங்கச் சென்றது. முனிவர் அம்மிருகத்தினுடைய கெட்ட எண்ணத்தைத் தெரிந்து கொண்டு, "ஏ மிருகமே! உன்னை யொத்த ஈனர்களுக்கு நன்மை செய்தால் இப்பலன்தான் கிடைக்கும். நீ இந்தப் பெரிய பதவிக்குத் தக்கவன் அல்லன். நீ முன்னிருந்த வடிவத்தையே அடைவாய்" என்று அதை முன்னிருந்த நாயாக மாற்றிவிட்டார்.

அந்த நாய் காலமெல்லாம் தனது மதியீனத்திற்காகக் கவலையடைந்து சிலநாளில் இறந்தது.

**"அகம்பாவத்தால் அழிவே நேரும்"**



# 6. பனைமரம்

பனைமரம், தென்னை கமுகு முதலிய மரங்களின் இனத்தைச் சேர்ந்தது. பனைமரங்கள் கடற்கரை யோரங்களில் அதிகமாக வளரும். புஞ்செய் நிலங்களிலும் மிகுதியாக உண்டு. நஞ்செய் நிலங்களின் வரப்புகளிலும் இரண்டொன்று காணப்படும். இம்மரம் வளர்வதற்கு மணற்பாங்கான இடமே ஏற்றதாகும்.

சில இடங்களில் நிலத்தைக் கொத்திவிட்டு இரண்டு மூன்றடி நீளத்திற்கு ஒவ்வொரு பனங் கொட்டையாகப் போடுவார்கள். பனைமரத்திலிருந்து பழங்கள் தாமாகவே உதிர்ந்தும் முளைப்பதுண்டு. முளைத்து வெளிக்கிளம்ப இரண்டு மூன்று மாதங்கள் செல்லும். நமது நாட்டில் இந்த மரத்திற்கு எருப்போடுதல், தண்ணீர் பாய்ச்சுதல் முதலியவைகளைச் செய்வதில்லை. இவைகளைச் செய்தால் இந்த மரங்கள் தகுந்த பலனைத் தரும். பனைமரம் காய்ப்பதற்கு முப்பது ஆண்டுகள் செல்லும். அதுமுதல் அம்மரத்தில் பதநீர் கட்ட ஆரம்பிப்பார்கள். சுண்ணும்பு பூசிய கலயத்தில் இறக்குவதற்குப் பதநீர் என்று பெயர். சுண்ணும்பு பூசப்படாத கலயத்தில் இறக்குவதற்குக் கள் என்று பெயர். ஒரு மரத்தில் ஐந்து ஆறு கலயங்களும் கட்டுவார்கள். நல்ல மரத்தில் மூன்றுபடி வரைக்கும் பதநீர் கிடைக்கும்.

இந்தப் பதநீரிலிருந்து சர்க்கரையும் கற்கண்டும் செய்யப்படும். இதிலிருந்து செய்யப்படும் வெல்லத்திற்குப் பனைவெல்லம் என்று பெயர். பன்ம்பூவை விறகாக உபயோகிப்பார்கள். சிறுவர்கள் பனம்பூவைக் கரியாக்கி, நெருப்பு வைத்துச் சுற்றித் தீப்பொறியை உண்டாக்குவார்கள். காயிலிருந்து நுங்கு எடுத்து விற்பார்கள். இந்த நுங்கு குளிர்ச்சியுள்ளது. நுங்கிலுள்ள நீர் குடிப்பதற்கு மதுரமாயிருக்கும்.

பழம் வாசனையாய் இருக்கும். ஆனால் பழம் கொடிய பித்தமானது. எளியவர்கள் இந்தப் பழத்தைத் தின்பார்கள். பனைமரத்தில் மட்டைகள் அதிகமாயிருக்கும். ஓலை கணக்கு எழுதுவதற்கு உபயோகப்படும். முற்காலங்களில் காகிதத்திற்குப் பதிலாக இவ் வோலைகளை உபயோகித்து வந்தார்கள். சிறுவர்களும் இந்த ஓலையில் எழுத்தாணிகொண்டு எழுதிப் படித்து வந்தார்கள். ஓலை அடைப்பு அடைக்கவும், வீடுகள் வேயவும் உபயோகப்படும். மட்டைகளும் அடுப்பெரிக்க உபயோகப்படும். மட்டையிலுள்ள நாரைக் கொண்டு கூடைகள் பின்னுவார்கள். மரம் வீடுகளுக்கு விட்டமாக உபயோகிக்கப்படும்.



# 7. துருவன்

விடாமுயற்சியினுல் புகழ் பெற்றவர்களில் துருவன் ஒருவன். அவனைப் போன்ற முயற்சியுடையவர்களைப் பார்ப்பது அரிது.

துருவன் உத்தானபாதன் என்ற அரசனுடைய மூத்த குமாரன். அவ்வரசனுக்குச் சுநீதி, சுருசி என்ற இரண்டு மனைவிமார் உண்டு. மூத்தாளின் மகன் துருவன். இளையாளின் மகன் உத்தமன். சுருசி பேருக்குத் தக்க அழகுடையவள். ஆதலால் அரசன் அவளை மிகுதியும் நேசித்து வந்தான். சுநீதியை அவ்வளவாக நேசிப்பதில்லை. இதனுல் இளையாள் மூத்தாளை மிகுதியும் துன்புறுத்தி வந்தாள்.

ஒரு நாள் அரசன் உத்தமனைத் தன் மடியின்மீது வைத்து முத்தமிட்டுக்கொண் டிருந்தான். அதைக் கண்ட துருவன் தானும் தன் தந்தை மடிமீதிருக்க ஆசை கொண்டான். அப்பொழுது துருவன் ஐந்து வயதுடைய பாலகன். அதைக் கண்ட சுருசி துருவனைப் பார்த்து, “அடா! நீ உனது தந்தைமடிமீதிருக்க ஆசைப்படுகிருயா ?” என்ருள்.

**துருவன்** — ஆம் அம்மா.

**சுருசி** — நீ கைக்கு எட்டாததற்கு ஆசைப் படுகிறாயா ?

**துருவன்** — அம்மா! என்ன அப்படிச் சொல்லுகிறீர்கள். என் தம்பி உத்தமன் உட்கார்ந்திருக்க வில்லையா ?

**சுருசி** — (கோபத்தால்) அடா! நரி எங்கே, தேவலோகம் எங்கே? உத்தமன் இருக்கும் இடத்தில் நீ இருப்பது தகுதியாகுமா ?

**துருவன்** — அம்மா! நானும் உத்தமனும் ஒரு தகப்பன் பிள்ளைகள் அல்லவா? தகப்பன் மடிமீதிருக்க என் தம்பியைப் போல் எனக்கும் உரிமையில்லையா ?

**சுருசி** — ஆமடா! "குருவி சிறியது கூச்சல் பெரியது" என்பது போல் சிறியவனாகிய நீ பெரிய பேச்சுகள் பேசுகிறாயே ?

**துருவன்** — தாயே! பிள்ளையினிடத்தில் குற்றம் இருந்தால் பொறுத்துக் கொள்ளுங்கள். ஒரு தந்தைக்குத் தனது பிள்ளைகளிடத்தில் வித்தியாசம் இருக்குமோ ?

**சுருசி** — இருக்காதா ? ஓரிடத்தில் தோன்றும் சங்குகளுக்குள்ள பெருமை நத்தைகளுக்கு உண்டா ?

**துருவன்** — தாயே! நான் என்ன தவறு செய்தேன்?

**சுருசி** — நீ எனது வயிற்றில் பிறப்பதற்குநல்ல தவம் செய்யவில்லை. நீ என் வயிற்றில் பிறந்திருந்தால் நீயும் உனது தம்பியைப் போல தந்தை மடிமீது இருக்கலாம்.

**துருவன்** — அம்மா! நான் அதற்கு என்ன செய்வேன்?

**சுருசி** — நீ போய்த் தவம் செய். கடவுள் உன்னை என் வயிற்றில் பிறக்கச் செய்வார். அப்பொழுது உனது எண்ணம் நிறைவேறும்; இனி இங்கு நில்லாதே செல் — என்றாள்.

துருவன் அழுதுகொண்டே தன் தாயிடம் சென்று நடந்ததை உரைத்தான். பாவம்! சுநீதி என்ன செய்வாள்! துருவனது கண்ணீரைத் துடைத்து, "அப்பா! திக்கில்லாதவர்க்குத் தெய்வமே துணை. நீ ஏழைகளுக்கு அருள்புரியும் எம்பெருமானை நினைத்துத் தியானம் செய். அவர் யாவற்றிலும் உயர்ந்த பதவியை உனக்கு அளிப்பார்" என்று போதித்தாள். தாய் சொன்ன சொற்கள் துருவனுக்கு உற்சாகத்தை ஊட்டின. உடனே அவன் மன வுறுதியோடு வீட்டைவிட் டகன்றான்.

துருவன் காட்டின் வழியாகப் போகும் போது நாரதரைக் கண்டான்.

**நாரதர்** — பாலகா! நீ யார்? நீ தனித்துக் காட்டுக்கு வருவானேன்?

**துருவன்** — சுவாமி! நான் ஓர் அரசகுமாரன். எனது சிற்றன்னை என்னை இகழ்ந்துரைத்தாள். நான் தவம் செய்ய வந்தேன்.

**நாரதர்** — சிறுவனாகிய உனக்கு என்ன அவமானம். நீ எவ்வாறு தியானம் செய்வாய்? இவ்வழகான உடம்பு கொடிய தவத்திற்கு ஏற்காது. வீட்டுக்குச் சென்று விளையாடு.

**துருவன்** — பெரியோரே! உம்மைச் சரணம் அடைந்தேன். தவத்திற்குரிய வழிகளை எனக்குப் போதித் தருளுங்கள்.

நாரதர் துருவனுடைய மனோவுறுதிக்கு மெச்சித் தவத்திற் குரியவைகளை உபதேசித்துச் சென்றார்.

துருவன் திருமாலிடத்து மனதைச் செலுத்தித் தவத்தைச் செய்தான். இடையில் உண்டான துன்பத்திற்கு அளவில்லை. சில நாள் உணவின்றி இருந்தான். நீர் குடிக்காத நாட்களும் பல. உறக்கத்தை மறந்தான். அவன் எதையும் சட்டை செய்யாமல் மனவுறுதியோடு கடவுளைத் தியானித்துக்கொண் டிருந்தான்.

அவனது கடுந்தவத்திற்கு இரங்கிக் கட வுள் அவனுக்கு முன்னே தோன்றினர். சகல சம்பத்துக்களையும் கொடுத்து நிலையான உன் னத பதவியையும் அவனுக்குக் கொடுத்தார். இப்பொழுதும் துருவன் நட்சத்திர உருவ மாக விளங்கிக்கொண்டிருக்கிருன்.

**"முயற்சி யுடையார் இகழ்ச்சி யடையார்"**



# 8. உண்மை

உலகத்தில் ஒருவனுக்கு இருக்க வேண் டிய நற்குணங்களில் முதன்மையானது உண் மையே. உண்மையைப் போலச் சிறந்த குணம் ஒன்றுமில்லை. எவ்வளவு சிறந்த குணங் கள் இருந்தாலும், உண்மை இல்லாவிடில், அவைகள் குருட்டுக் கண்ணுக்கு மையிட்டது. போலச் சிறந்து விளங்கா. உயர்குலத்தில் பிறந்திருந்தாலும், செல்வத்தில் மிகுந்திருந் தாலும், கல்வியிருந்தாலும், உண்மை யில்லா விடில் அவனை ஒருவரும் மதிக்கமாட்டார்கள். உண்மை ஒன்றிருக்குமானல் அவனை எல் லோரும் மதிப்பார்கள்.

உண்மை யென்ருல் என்ன? உள்ளதை உள்ளபடியே சொல்வதாகும். சொன்ன சொல்

தவருமல் நடப்பதாகும். விளையாட்டுக்காகி லும் பொய் சொல்லாதிருப்பது.

உண்மை பேசுபவனை எல்லோரும் நம்பு வார்கள்; அவனை யாவரும் நேசிப்பார்கள்; அவனுக்குத் தம்மாலான உதவியைச் செய் வார்கள்; கடவுளும் அவனை நேசிப்பார்; அவன் இவ்வுலகத்தில் உள்ள சகல சுகங்களை யும் அனுபவிப்பான்; மறுவுலகத்திலும் இன் புறுவான்; உண்மை யுடையவன் இறந்த போதிலும் அவனது புகழ் எப்பொழுதும் நிலைத்திருக்கும். அரிச்சந்திரன் இறந்து எத் தனையோ ஆண்டுகளாயினும், அவனது புகழ் மறையவில்லை யல்லவா?

பொய் பேசுபவனை ஒருவரும் நம்பமாட் டார்கள். அவனை யாவரும் வெறுப்பார்கள். பெரியோர்கள் அவனை அணுகமாட்டார்கள். கடவுளும் அவனுக்கு உதவி செய்யமாட்டார். பாண்டவர்கள் சத்தியத்திற்குக் கட்டுப்பட்டு வனவாசம் செய்து மீண்டுவந்து தமக்குரிய நாட்டைக் கேட்க, கொடுக்காத துரியோதன னுடைய கதி என்னவாயிற்று? பொய் பேசு பவனுடைய பெயரையுங்கூட, அவன் உயி ரோடிருக்கும் பொழுதே சொல்லமாட்டார்க ளென்ருல், அவன் இறந்தபிறகு அவனை நினைப்பார் யார்?

ஒருமுறை ஒருவன் பொய் சொல்லிவிட்டால் பின் அவன் எவ்வளவு உண்மை சொன்னாலும் நம்பமாட்டார்கள். ஒரு காலத்தில் "புலி ! புலி !" என்று பொய் சொல்லிய ஒரு இடையனுடைய கதி என்ன ஆயிற்று ? புலிக்கு இரையானான் அல்லவா ? ஆதலால் பிள்ளைகளே ! நீங்கள் எப்பொழுதும் உண்மையே பேசுங்கள். விளையாட்டுக்காகிலும் வேடிக்கைக்காகிலும் பொய் சொல்லாதீர்கள்.



# 9. பாம்புகள்

பாம்பு ஊர்ந்து செல்லும் பிராணி வர்க்கத்தைச் சேர்ந்தது. பாம்புக்குக் கால்கள் இல்லை. அவை வயிற்றினால் ஊர்ந்து செல்லும்.

பாம்புகளில் பலவகை யுண்டு. அவை தண்ணீர்ப் பாம்பு, நல்ல பாம்பு, சாரைப் பாம்பு, கண்ணாடி விரியன், கட்டு விரியன், மலைப் பாம்பு முதலியன.

பாம்புகளுக்கு உடல் நீண்டு உருண்டிருக்கும். இவைகளின் எலும்புக் கூட்டில் மண்டையோடும், நீண்ட முதுகெலும்பும், விலா எலும்புகளும் உண்டு. முதுகெலும்பிலுள்ள

பல துண்டெலும்புகள் மிக விசித்திரமாக அமைந்திருக்கின்றன. அதனால் அவற்றின் முதுகெலும்பு எல்லாப்பக்கங்களிலும் அசைந்து செல்லக்கூடும். சிறிது தூரம் வரையில் நேராக நிற்கவும் கூடும்.

பாம்புகளின் மேற்பாகத்திலும் அடிப்பாகத்திலும் செதில்கள் அமைந்திருக்கின்றன. இந்தச் செதில்களின் உதவியால் ஓடுகின்றன என்றும் சொல்லலாம்.



பாம்புகளின் நாக்கு நீளமாயும், அதன் நுனி இரு பிளவுடையதாயும் இருக்கும். பாம்பு, தன் நாவை வெளியே நீட்டவும் உள்ளே இழுக்கவும் செய்யும். பாம்புகளுக்குக் காதுகள் இல்லை எனவும், கண்களாலே ஓசையை உணர்கின்றனவென்றும் சொல்வர். இதனாலே பாம்புக்குக் கட்செவி என்றொரு

பெயர் உண்டு. உண்மையாக அவைகள் சூட்சுமமான உட்செவிகளினலே ஓசையை உணர்கின்றன.

பாம்புகளின் பற்கள் இரையைக் கெட்டியாகப் பிடித்துக்கொள்ளப் பயன்படும். பற்கள் இரையை மெல்லவும், கிழிக்கவும் உபயோகப்படா. பாம்புகள் எலிகளையும் தவளைகளையும் உணவாகப் பிடித்து விழுங்கிவிடும். பெரிய இரையா யிருந்தால் பாம்பின் வாய் விரியும்.

முன் சொல்லப்பட்ட பாம்புகளில் தண்ணீர்ப் பாம்புக்கு விஷம் இல்லை. மற்ற பாம்புகள் விஷமுடையன. விஷப் பாம்புகளுக்கு மேல் வாயில் இரண்டு பக்கங்களிலும் இரண்டு விஷப் பைகள் உண்டு. அந்த விஷப் பைகளின் பக்கத்தில் விஷப் பற்கள் உண்டு. இந்த விஷப் பற்களின் உள்ளே குழலாய் நீண்டிருக்கும். அதன் நுனியில் ஒரு சிறிய துவாரமுண்டு. விஷப் பையில் உண்டாகும் விஷம் இக் குழல் வழியாகச் சென்று பாம்பு கடிக்கும் போது காயத்திற்குள் புகும்.

நமது தேசத்தில் உள்ள எல்லாப் பாம்புகளிலும் கொடியது நாகப் பாம்பு. இதை நல்ல பாம்பு என்றும் கூறுவர். இந்தப் பாம்புக்குப் படமுண்டு. படத்தின் மேல் ஒரு கோடு இருக்கும்.

விஷப் பாம்பு கடித்தவுடன் விஷம் உடம்பில் பரவாமலிருக்கும்படி கடிவாயின் மேற்பாகத்தைக் கயிற்றைக் கொண்டு கட்டி இறுக்கி, அந்தக் கடிவாயைக் கீறி விஷம் கலந்த இரத்தத்தை வெளியேற்ற வேண்டும்.

பிள்ளைகளே! '**பாம்பைக் கண்டால் படையும் நடுங்கும்**' என்ற பழமொழியை நீங்கள் கேட்டிருப்பீர்கள். ஒரு சிலர் பாம்பைப் பிடித்து ஆட்டுவார்கள். அது தவறு. "**பாம்போடு பழகேல்**" என்பது நீதி வாக்கியமல்லவா.



## 10. கூட்டுறவுச் சங்கம்

நமது நாட்டில் அநேகர் உழவுத்தொழில் செய்து பிழைக்கின்றனர். அவர்களில் பலர் மிகுந்த ஏழைகள். அவர்களுடைய குடும்பங்கள் பெரியது. பொருள்களின் விலையும் அதிகம். ஆதலால் அவர்கள் ஜீவிப்பது மிகவும் கஷ்டம்.

சிலர் படிப்பில்லாமையால் தமது பொருள்களை வீணே செலவு செய்வார்கள். இவர்கள் கல்யாணத்திற்காகவும், வீடு கட்டுவதற்காகவும், செல்வர்களிடம் கடன் வாங்குவார்கள். செல்வவான்கள் எளியவர்கட்கு அதிக வட்டிக்குப்

பணம் கடன் கொடுப்பார்கள். தவணை தவ றினால் இரட்டிப்பான வட்டி வாங்குவார்கள். சாதாரணமாக பணக்காரர்களுக்குத் தயவும் தாட்சண்யமும் இருக்காது. குடித்தனக்காரர் கள் சில சமயங்களில் கடன் கொடுக்க முடி யாமல் வீடுவாசல்களையும் விற்று ஏழைகளாய் விடுவார்கள்.

இந்த ஏழைகளில் சிலர் வறுமையால் திருடச்சென்று தண்டனை அடைவார்கள்; சிலர் ஊரைவிட்டு ஓடிப் போவார்கள். இப் படிப்பட்ட ஏழைகளை எப்படிக் காப்பது? இவர்களுக்குக் குறைந்த வட்டிக்குக் கடன் கொடுக்கவேண்டும். சிறிது சிறிதாகப் பணத் தைப் பெறவேண்டும். இப்படிச் செய்தால் அவர்களும் கஷ்டமில்லாதிருப்பார்கள். கட னையும் தவறாது கொடுப்பார்கள் அல்லவா?

பணக்காரர்களிற் சிலர் ஒன்றுகூடி ஒரு மூலதனத்தை ஏற்படுத்த வேண்டும். குறைந்த வட்டிக்குக் கடன் கொடுக்கவேண்டும். இப்படி யாகப் பலர் ஒன்றுகூடிய சங்கத்திற்குக் "கூட் டுறவுச் சங்கம்" என்று பெயர். இச்சங்கம் ஏழைகளுக்கு உபகாரமா யிருப்பதால், இதற்கு "உபகாரச் சங்கம்" என்றும் பெயர் உண்டு.

இச்சங்கத்தில் சேர்ந்தால் கௌரவ முண் டாகும். கடன் கிடைக்கும். இதில் சேர்ந்

தவர்களது கௌரவத்தை விருத்தி செய்வதனால் இச்சங்கத்திற்குக் "கௌரவ சங்கம்" என்றும் பெயருண்டு. இச்சங்கம் நமது நாட்டில் நாளுக்குநாள் விருத்தியாகி வருகிறது.

இச்சங்கத்தில் இருப்பவர்கள் அறிவாளிகளாகவும், உழைப்பாளிகளாகவும், நன்னடத்தை உடையவர்களாகவும் இருக்க வேண்டும். ஏழைகளுக்கு நாணயமே தனம். அதுவே மதிப்பு. யோக்கியனானாலும் சோம்பேறிகளுக்கு வாங்கிய கடனைக் கொடுக்கச் சக்தியிராது. கஷ்டப்படுபவனாயினும் அறிவில்லாவிடில் பொருளை வீணில் செலவு செய்வான். ஆதலால் சங்கத்தை ஏற்படுத்தும்போது இவைகளை ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். இவ்வாறு இல்லாவிட்டால் சங்கம் நடைபெறாது. இதில் சேர்பவர்கள் சுதந்தரமான ஜீவன முடையவர்களாய் இருத்தல் வேண்டும். பணக்காரர்களையும் படித்தவர்களையும் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

இச்சங்கத்தில் கெட்டிக்காரர்களை நிர்வாக சபை அங்கத்தினராகத் தேர்ந்தெடுப்பார்கள். அவர்கள், தங்களில் ஒருவரைக் காரியதரிசியாகத் தேர்ந்தெடுப்பார்கள். காரியதரிசி கொடுக்கல், வாங்கல் எல்லாம் செய்வார்.

இச்சங்கத்தில் சேர்பவர்கள் இச்சங்கத்தின் நோக்கங்களிற் சிலவற்றை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்.

1. கௌரவத்தை யுண்டாக்கும், மிதமான செலவு செய்யத் தூண்டும்.

2. கடன் வாங்கின பணத்துக்குச் சங்கத்தின் அங்கத்தினர் ஒவ்வொருவருக்கும் பாத்தியமுண்டு.

3. கடன் கொடுக்கும்போது, காரிய நிர்வாகிகள் கடன் கேட்பவன் நிலைமையையும், கடன் வாங்குவதற்குரிய அவசியத்தையும் தெரிந்துகொள்ளவேண்டும்.

4. கடன் வாங்கினவர்களுக்குப் பல தவணைகள் கொடுக்க வேண்டும்.

5. வீண் செலவு செய்பவனையும், சோம்பேறியாயும் காணப்படின், அப்பொழுதே பணத்தை வசூலிக்க வேண்டும். அவனையும் சங்கத்தினின்றும் விலக்கிவிட வேண்டும்.



## 11. சங்கத்தின் உபயோகம் – II

இந்தச் சங்கம் மற்றவர்களுக்குக் கடன் கொடுத்து உதவி செய்கிறது. நல்ல மாதிரியையும், நீதியையும் போதிக்கின்றது. ஜனங்களை மிதமாகச் செலவு செய்யும்படி தூண்டுகிறது. இச் சங்கத்தின் போதனையால், இதில் சேர்பவர்கள் எல்லாரும் நல்லவர்களாய்த் தமது கடனையும் தவணை தவறாமல் செலுத்துவார்கள். கலியாணம் முதலிய காரியங்களையும் செய்து கொள்வார்கள்.

ஏழைகள் பணக்காரரிடம் கடன் வாங்கிவிட்டுத் திருப்பிக் கொடுக்க முடியாமல் ஊரை விட்டு ஓடவேண்டியதில்லை. தரித்திரத்தினால் தீயகாரியங்களைச் செய்யவும் வேண்டியதில்லை.

குடி சூது முதலிய தீய காரியங்களைச் செய்பவர்கள் இச்சங்கத்தில் சேர முடியாது; ஆதலால் அவர்கள் தீய பழக்கங்களைக் கைவிட்டு நல்லொழுக்க முடையவர்களாகி இச்சங்கத்தில் சேர்ந்து நல்ல பலனை அடைவார்கள். தாங்கள் நல்ல யோக்கியதை பெற நல்லொழுக்கமாய் இருக்கவேண்டும் என்று எண்ணி, தீய பழக்கங்களை யெல்லாம் விட்டுவிடுவார்கள்.

மற்றவர்கள் சுகமாயிருந்தால் தங்களது சுகமும் விருத்தியாகுமென்று எண்ணிப் பிறருடைய நலத்தை விருத்தி செய்ய வழி தேடு

வார்கள். தான் பிறர்மீது குற்றங் கண்டுபிடிப் பதுபோலவே, மற்றவனும் தன் குற்றங்களைக் கண்டுபிடிப்பான் என்றெண்ணி யாவரும் நல் லவர்களாக இருக்க முயலுவார்கள். திருப்தி, கௌரவம், பொறுமை முதலிய நற்குணங்கள் எல்லாம் இச் சங்கத்தால் விருத்தியாகும்.

ஜனங்கள் வழக்குத் தொடுக்க நியாய சபைக்குச் செல்ல வேண்டியதில்லை. சோம் பேறிகளுக்கும் வேலையில் ஊக்கத்தைத் தரும். வீண் செலவுக்காரன் மிதமாகச் செலவு செய் யக் கற்றுக்கொள்வான். குடிப்பவன் குடிக்கும் தீய பழக்கத்தை விட்டுவிடுவான். எழுதப் படிக்கத் தெரியாதவர்களும் படிக்கத் தெரிந்து கொள்வார்கள். நல்ல காரியங்களைச் செய்யத் தூண்டுதல் செய்யும். சங்க முன்னேற்றத்திற் காக உழைக்கச் சங்கமும் விருத்தியடையும். இவ்வாறு விருத்தி செய்ய யாவரும் தேச பக்தர்கள் என்று பாராட்டப்படுவார்கள்.

இவ்வாறு நமது காரியங்களை நாமே செய்துகொள்வதைக் கண்டால், அரசாங்கத் தாரும் நமக்கு இன்னும் பல சுதந்தரங்களையும் அளிப்பார்கள். இப்படிப்பட்ட சங்கங்கள் நமது தேசத்திலுள்ள ஒவ்வொரு ஊர்களிலும், நாடு நகரங்களிலும் இருத்தல் வேண்டும். நமது தேசமும் முன்னேற்றமடையும். மற்ற தேசங்களைவிட நம் தேசம் சிறந்து விளங்கும்.



## 12. நன்றியுள்ள வேலைக்காரன்

சிங்கபுரம் என்ற ஒரு நாட்டைத் தரும குணன் என்ற அரசன் ஒருவன் ஆண்டு வந்தான். அவன் நீதி தவருமல் அரசு செய்தான். அவன் நாட்டில் வாழும் குடிகளும் சுகமாக இருந்தார்கள்.

அவனது கொலு மண்டபத்தில் வீர சிம்மன் என்ெருரு சேவகன் இருந்தான். அவன் பகலென்றும் இரவென்றும் பார்க்க மாட்டான்; வெயிலென்றும் மழையென்றும்

எண்ணமாட்டான்; எப்பொழுதும் அரண் மனையில் காவல் செய்து வந்தான்.

ஒரு நாள் இரவில் அரசன் அயர்ந்து தூங்கிக்கொண் டிருந்தான். எங்கிருந்தோ பெரிய சத்தம் ஒன்று கேட்டது. அரசன் திடீரென விழித்து எழுந்து, வீரசிம்மனை அழைத்து, அந்தச் சத்தத்தைத் தெரிந்துவா என்றான்.

அவனும் விரைந்து சென்று, நகருக் கருகிலிருந்த ஏரிக்கரையில் ஒரு பெண் அழுது கொண்டிருப்பதைப் பார்த்து, அவளைக் கிட்டி, "அம்மா! ஏன் அழுதுகொண் டிருக்கிறாய்?" என்றான்.

அதற்கு அவள், 'நான் இந்நகரில் இருக் கும் தருமதேவதை. அரசனது தருமபரிபால னத்திற்கு மகிழ்ந்திருந்தேன். இந்த அரசன் மூன்று தினத்தில் இறந்துபோவான்; இனி இப்படிப்பட்ட தர்மராஜனைப் பார்க்க முடி யாது" என்றாள்.

வீரசிம்மன், "தாயே! இந்த ஆபத்தை நீக்க ஒரு உபாயம் சொல்லவேண்டும்" என்று கேட்டான். அதற்கு அவள், "வீரசிம்மனது பிள்ளையைக் காளிக்குப் பலி யிட்டால் அரசன் பிழைத்துக் கொள்வான்" என்றாள்.

உடனே வீரசிம்மன் தன் வீட்டுக்குச் சென்று, தனது மனைவியிடத்தில் நடந்ததைச் சொல்லி "அரசனைப் பாதுகாக்க வேண்டும்" என்றான். அவன் மனைவியும் அரசனைப் பாதுகாத்தற் பொருட்டுத் தனது பிள்ளையை இழக்கச் சம்மதித்தாள். வீரசிம்மன் மன மகிழ்ந்து, தனது மனைவியுந் தானும் தமது பத்து வயதுடைய பிள்ளையைக் கூட்டிக் கொண்டு காளி கோயிலுக்குச் சென்றார்கள். அங்கு தமது பிள்ளையைப் பலி கொடுத்துத் தமது அரசனுக்கு நீண்ட ஆயுளைத் தரும்படி வேண்டிக் கொண்டார்கள்.

மனைவி புருஷனுடைய வார்த்தைக்கு இணங்கிப் பிள்ளையைப் பலி கொடுத்தாலும், புத்திரசோகம் அவளை வாட்டிற்று. அத் துயரம் பொறுக்காது அவள் தீயில் விழுந்து மாண்டாள். அதைக்கண்ட வீரசிம்மன் அத் துயரம் பொறுக்க முடியாமல் தற்கொலை செய்துகொண்டு இறந்தான்.

இவைகளைக் கேட்ட அரசன், அந்தக் கொலைகளுக்குக் காரணம் தானே என்பதை யறிந்து, காளி கோவிலுக்குச் சென்று தன் உடைவாளை எடுத்துத் தன் கழுத்தை அரியத் தொடங்கினான். உடனே காளியும் அவன் முன் தோன்றி அவனைத் தடுத்து, இறந்தவர்

களையும் உயிர்ப்பித்துக் கொடுத்து, அவனுக்கு வேண்டிய வரங்களைத் தந்து மறைந்தனள்.

இவற்றையெல்லாம் கேட்ட ஊரார் வீர சிம்மனது ராஜபக்திக்கு வியந்து அவனைக் கொண்டாடினார்கள். அரசனும் அவனுக்குச் சில நாடுகளைக் கொடுத்து பல சிறப்புகள் செய்தான்.



# 13. பருவங்கள்

ஒவ்வொரு ஊரிலும் காலநிலை வேறுபட்டிருக்கும். அது ஒரு மாதத்தில் இருப்பது போல மற்ற மாதங்களில் இருப்பதில்லை. சில மாதங்களில் உஷ்ணம் அதிகமாயிருக்கும். சில மாதங்களில் குளிர் அதிகமாக இருக்கும். சில மாதங்களில் மழை மிகுதியாகப் பெய்யும். சில மாதங்களில் பனி அதிகமா யிருக்கும். இம் மாதிரியான கால வேறுபாடுகள் ஒவ்வொரு ஆண்டிலும் உண்டாகின்றன. ஆதலால், நமது தேசத்தில் ஒரு வருஷத்தை ஆறு பருவங்களாகப் பிரித்திருக்கிறார்கள். அவை : இளவேனிற்காலம், முதுவேனிற்காலம், கார்காலம், குளிர்காலம், முன் பனிக்காலம், பின் பனிக்காலம் என்பனவாம்.

சித்திரையும் வைகாசியும் இளவேனிற் காலமாகும். இது செழிப்பான காலம் ; அதிக குளிரும் அதிக உஷ்ணமும் இல்லாத காலம். இக்காலத்தில் தென் காற்று வீசும். மரஞ் செடிகள் தளிர்க்கும். இம் மாதங்களில்தான் கல்யாணங்கள் அதிகமாக நடத்தப்படும். இம் மாதங்களில் பாடசாலைகளை விடுமுறைக்கு மூடி விடுவார்கள்.

ஆனியும், ஆடியும் முதுவேனிற் காலமாகும். இக்காலத்தில் வெய்யில் அதிகமாயிருக்கும். மேல்காற்று வீசும் ; ஆறு, குளம் முதலிய நீர் நிலைகளில் தண்ணீர் குறைந்து போகும்.

ஆவணியும் புரட்டாசியும் கார்காலமாகும். இது கோடை காலத்துக்கு அடுத்த காலம். இம் மாதங்களில் மழை அதிகமாகப் பெய்யும். ஆறு, குளம், ஏரிகளில் தண்ணீர் நிரம்பியிருக்கும். பயிர் பச்சைகள் எல்லாம் நன்ருகச் செழித்து வளரும். இது மழைகாலமெனப்படும்.

ஐப்பசியும் கார்த்திகையும் குளிர் காலமாகும். இது மழைகாலத்திற்குப் பிந்தியகாலமாகும். இக் காலத்தில் மழை நின்றுவிடும். ஆறுகளில் நீர் குறைந்து வரும்.

மார்கழியும் தையும் முன் பனிக்காலம் என்று சொல்லப்படும். இது குளிர் காலத்துக்குப் பிந்தியகாலம். இக் காலத்திலும் குளிர் இருக்கும். இக் காலத்தில் இரவுக்கு முன்னே மாலைப் பொழுதில் பனி அதிகமாயிருக்கும்.

மாசியும் பங்குனியும் பின் பனிக்காலம் எனப்படும். இது முன் பனிக்காலத்துக்குப் பிற்பட்ட காலமாகும். இளவேனிற் காலத்துக்கு முந்தியகாலம். இம்மாதங்களில் காலையில் பனி அதிகம். குளிர் மிகுதியாக இருக்கும். ஆதலால் நாம் கம்பளிப் போர்வைகளை உபயோகித்தல் வேண்டும்.

இவ்வாறு பருவங்களும் நமக்கு நன்மையை விளைவிக்கின்றன.



## 14. மரியாதை ராமன்

ஒரு கிராமத்தில் இராமன் என்று ஒருவன் இருந்தான். அவன் மரியாதையான குடும்பத்தில் பிறந்தவன். அவன் அதிக கௌரவமாக வாழ்ந்து வந்தான். ஆதலால் ஜனங்கள் அவனை மரியாதை ராமன் என்று அழைப்பார்கள்.

இக்காலத்தில் இருப்பது போல் அக்காலத்தில் நியாய சபைகள் இல்லை. நியாய வாதிகளும் இல்லை. ஏதாவது வழக்கு ஏற்பட்டால் கிராமத்திலுள்ள பெரிய மனிதர்கள் அந்த வழக்கைத் தீர்த்துவிடுவார்கள். அவ்வூர்ப் பக்கங்களில் உள்ளவர்கள் இந்த மரியாதை ராமனைப் பெரிய மனிதனைக்கொண்டு தங்கள் வழக்குகளைத் தீர்த்துக்கொள்வார்கள்.

அக் கிராமத்தில் ஒரு செட்டி யிருந்தான். அவன் தனது குமாரனுக்கு மணம் செய்வித்து, ஊர்வலத்திற்காக ஒரு மகமதியனிடம் இருந்த யானையை வாடகைக்குப் பேசிக்கொண்டு வந்திருந்தான். ஊர்வலம் புறப்படு முன்னே அந்த யானை கீழே விழுந்து இறந்து போயிற்று.

செட்டியார் விசனமுற்று அந்த யானைக்குரிய விலையை மகமதியனிடம் கொடுத்தான். அவன் "எனக்குப் பணம் வேண்டாம். எனது யானையே எனக்கு வேண்டும்" என்றான். இருவரும் மரியாதை ராமனிடம் வழக்குத் தொடுத்தார்கள். அவன் இருவரையும் அடுத்த நாள் வரும்படி சொல்லி அனுப்பிவிட்டான்.

ராமன் ரகசியமாகச் செட்டியைக் கூப்பிட்டு, "நீ நாளைக்கு வரவேண்டாம். உனது

வீட்டில் இருந்துகொண்டு வெளிக் கதவிற்குப் பின்னல் கண்ணாடிச் சாமான்களை வரிசையாக வைத்திரு; துலுக்கன் உன்னை யழைக்க வருவான். அப்பொழுது உனது கதவைத் திறக்கும் பொழுது உனது கண்ணாடிச் சாமான்களெல்லாம் உடைந்து போகும். அப்பொழுது அவன் அதன் விலையைக் கொடுக்க வருவான். அதற்கு நீயும் எனக்குப் பணம் வேண்டாம்; எனது சாமான்களே எனக்கு வேண்டும் என்று சொல்" என்று சொல்லி அனுப்பிவிட்டான்.

மறுநாள் அவன் சொன்னபடியே யாவும் நடந்தன. செட்டியும் தனக்குக் கண்ணாடிச் சாமான்களே வேண்டு மென்று பிடிவாதஞ் செய்தான். இருவரும் மரியாதை ராமனிடம் சென்று முறையிட்டுக் கொண்டார்கள்; அவன் மகமதியனைப் பார்த்து, "நீ என்ன சொல்லுகிறாய்?" என்றான். அவன் ஒன்றும் சொல்ல வழியில்லாது "எனது யானைக்கும் அவனது கண்ணாடிச் சாமான்களுக்கும் சரி. யானும் செட்டிக்குக் கண்ணாடிச் சாமான்கள் கொடுக்க வேண்டியதில்லை. செட்டியும் எனக்கு யானையைக் கொடுக்க வேண்டியதில்லை" என்று சொல்லிப் போய்விட்டான்.





## 15. குமணன்

முன் ஒரு காலத்தில் நமது நாட்டில் குமணன் என்ருெரு சிற்றரசன் இருந்தான். அவன் குடிகளிடத்தில் அன்புடையவன். யாவருக்கும் இல்லையென்னுது கொடுக்கும் குணமுடையவன். கல்வியிற் சிறந்தவன். கற்ற புலவர்களையும் நன்கு ஆதரித்து வேண்டிய பொருள்களைக் கொடுப்பான்.

இவனுக்கு ஒரு தம்பி இருந்தான். அவனுக்கு இளங்குமணன் என்று பெயர். அவனும் நல்ல குணமுடையவன். ஆயினும்

தீயவர் நேசம் கொண்டவன். அதனால் நல்ல காரியங்களை வெறுப்பான். தனது தமையன் தமது பொருள்களை எல்லாம் பிறருக்குக் கொடுப்பதால் குறைந்துபோகும் என்று எண்ணினான். ஆதலால் அவன் தன் அண்ணனை வெறுக்கத் தலைப்பட்டான். சில நாட்களில் தமையனையே கொன்றுவிட்டு அரசைக் கைப் பற்றவும் எண்ணினான்.

இதனை உணர்ந்த குமணன் தனது தம்பி யின் ஆசையை நிறைவேற்றக் கருதி, ஒரு நாள் ஒருவருக்கும் தெரியாமல் நாட்டைவிட் டுக் காடு சென்றான். அங்கிருந்துகொண்டு காய் கனி கிழங்கு முதலியவற்றைத் தின்று காலங் கழித்து வந்தான். குமணன் காடு சென்றதும் இளங் குமணன் அரசனானான். அவனது தீயசெயல்களைக் கண்டு ஜனங்கள் அவனை வெறுத்தார்கள். இதைகண்ட இளங் குமணன் தன் தமையன்மீது மிகுதியும் பகைமை கொண்டான். முடிவில் அவன் சிரசைக் கொண்டு வருபவருக்கு ஆயிரம் பொன் தருவதாகவும் பறை சாற்றுவித்தான்.

ஒருநாள் காட்டிலிருந்த குமணன் ஒரு வரைச் சந்தித்து அவரை வினவ, அவர் "தான் ஒரு புலவன் என்பதையும், குமணன் மீது கவிபாடித் தனது வறுமையைப் போக் கிக்கொள்ள வந்ததாகவும்" புகன்றார். அதைக்

கேட்டலும் குமணன் மிகுதியும் வருந்தி அவரிடத்தில் தனது வரலாற்றை எடுத்துரைத்தான். அப்பொழுது தனது தம்பி பறை சாற்றியது தனது நினைவுக்கு வருதலும், அவன் மனம் சிறிது மகிழ்ந்து, புலவரை நோக்கி, "அருந்தமிழ்ப் புலவீர்! உமது வறுமையைப் போக்கிக்கொள்ள வழியொன்றுளது. என் தம்பி சிலநாட்களுக்கு முன், எனது சிரத்தைக் கொண்டுவருபவர்க்கு ஆயிரம் பொன் அளிப்பதாக பறை சாற்றுவித்தான். இதோ எனது சிரத்தைத் துணித்து உமது வறுமையைப் போக்கிக் கொள்ளும்" என்று தனது உடைவாளை நீட்டினன்.

புலவர் அவனது பெருங்குணத்துக்கும் அருங்கொடைக்கும் வியந்து அவனிடத்தில் விடைபெற்றுச் சென்றூர். பின் ஒரு சிற்பி இடத்திற்குச்சென்று, குமணனது தலைபோல்போலிச் சிரம் ஒன்று செய்வித்து வாங்கிக்கொண்டு சென்று இளங்குமணனை அடைந்தார்.

இளங்குமணன் அத்தலையைக் கண்டான். தனது தமையனது தலையென் றுணர்ந்தான். "தானுடாவிடினும் தன் தசையாடுமல்லவா?" அவனது தீய குணங்கள் எல்லாம் எங்கேயோ பறந்தோடி விட்டன. சகோதர வாஞ்சை யாரை விட்டது? 'அண்ணு! அண்ணு!'

என்றழைத்தான். 'ஐயோ அண்ணு!' என்று அரற்றினுன். 'உடற் பிறப்பால் தோள்வலி போம் என்பதை அறவே மறந்தேனே' என்று கதறினுன். மீட்டும் இளங்குமணன், புலவரை நோக்கிப் "புலவீர்! உடற்பிறப்பாகிய தமையனைக் கொல்லக் காரணமாயிருந்த இப் பாவி உயிரோ டிருத்தல் முறையாகுமோ? இதோ யானும் இறந்தொழிவேன்' என்று தன் வாளை எடுத்தான்.

அச் சமயம் புலவர் அவனது கரத்தைப் பற்றிக்கொண்டு, "ஐயா! கவலைப்பட வேண்டாம். கடவுளருளால் உமது அண்ணன் மீளவும் உயிர் பெற்றுவரச் செய்கின்றேன்" என்ருர். புலவர் இளங்குமணனிடம் விடை பெற்றுச் சென்று காடடைந்து நடந்ததைக் குமணனிடம் சொல்லி அவனை நாட்டிற்கு அழைத்து வந்தனர்.

இழந்த பழந்தனம் மீட்டும் எய்தப் பெற்றதுபோல தமையனைக் கண்டதும் தம்பி அளவற்ற மகிழ்ச்சி யடைந்தான். புலவரைப் பலவாறு போற்றினுன். தமையனது பாதங்களில் வீழ்ந்து தன்னை மன்னிக்குமாறு வேண்டிக் கொண்டான். மறுபடியும் அரசாட்சி செய்யும்படி கேட்டுக்கொண்டான். புலவருக்கும் மிகுந்த வரிசைகள் பல வழங்கினுன். குமண

னும் முன்போலவே அரசு செய்து வந்தான். இளங் குமரனும் தனது தமையனுக்கு அடங்கி நடந்து வந்தான்.



## 16. பாடகன்

ஓர் ஊரில் பாடகன் ஒருவன் இருந்தான். அவன் கூனும் முடமும் உடையவன். கேட் போர்க்கு இனிதாகப் பாடுவான். அவன் மிகுந்த ஏழையாதலால், வீடுதோறுஞ் சென்று பாட்டுப் பாடி வயிறு வளர்த்து வந்தான்.

ஒருநாள் செல்வன் ஒருவன் அவனை அழைத்து அவனது பாடலைக் கேட்டு இன்புற்று அவனுக்கு உணவளித்தான். அவன் உண்ணும்போது ஒரு கொட்டை அவனது தொண்டையில் சிக்கிக்கொண்டது. அதனால் பாடகன் மிகுதியும் வருந்தினான். அதைக் கண்ட வீட்டுக்காரன் தனக்கு என்ன ஆபத்து நேருமோ என்றஞ்சினான். இரகசியமாக அவனைத் தூக்கிச் சென்று வைத்தியன் வீட்டில் வெளியே உட்காரவைத்து, அவனுக்குமருந்து கொடுக்கும்படி பணமும் கொடுத்துச் சென்று விட்டான்.

வைத்தியன் வெளியே செல்லப் புறப் பட்டான். இரவானதால் பாடகன் இருந்தது

தெரியாமல் வந்து அவனைக் கீழே தள்ளி விட்டான். பாடகன் கீழே வீழ்தலும், அவனைத் தூக்கி வைத்து அவனது கையைப் பிடித்துப் பார்த்து, இறந்து போய்விட்டதாக எண்ணினன். வெளிக்குத் தெரிந்தால் தனக்குக் கஷ்டம் என்பதை அறிந்து, அவனை மெதுவாகத் தூக்கிச் சென்று பக்கத்திலுள்ள ஒரு தோட்டத்திலிருந்த கொய்யா மரமொன்றில் சார்த்தி வைத்துவிட்டுப் போய்விட்டான்.

தோட்டக்காரன் அவனைக் கண்டு திருடனென்று எண்ணித் தடியா லடித்தான். பாடகனும் கீழே விழுந்துவிட்டான். அதைக் கண்ட தோட்டக்காரன் அவன் இறந்து போய் விட்டானென்று எண்ணிப் பயந்து, அவனை மெதுவாகத் தூக்கிக் கொண்டுபோய், வழியிலிருந்த ஒரு கல்லின் மேல் சாய வைத்துவிட்டுப் போய்விட்டான்.

இரவு பத்து மணிக்குப் பின் ஒரு செட்டி தன் கடையைச் சார்த்திவிட்டு அவ்வழியே வீடு சென்றான். அவன் கால் பட்டுப் பாடகன் கீழே விழ, அச் செட்டி அவனைத் ‘திருடன் திருடன்’ என்று சொல்லிக் கொண்டே தன் கையிலிருந்த கோலால் அவனை நையப்புடைத்தான். அப்பொழுது அவ்வழியே வந்த தலையாரி ஓடிவந்து பார்த்து, அச் செட்டியை

அவனைக் கொன்றதாக எண்ணி, அவனைக் கூட்டிக்கொண்டு போய் நீதிபதியிடம் விட்டான். நீதிபதியும் செட்டியை விசாரிக்க, அவன் தானே கொன்றதாக ஒப்புக் கொண்டான். நீதிபதியும் செட்டிக்குச் சட்டப்படி கடுந் தண்டனை விதித்தான்.

இச் சமாசாரம் ஊரெங்கும் பரவுதலும், தோட்டக்காரன் ஓடிவந்து, தானே குற்றவாளி என்று சொல்ல, நீதிபதியும் அத் தண்டனையை மாற்றித் தோட்டக்காரனுக்கு விதித்தான்.

அந்தச் சமயத்தில் வைத்தியன் வந்து, 'தோட்டக்காரன் கொல்லவில்லை; நானேகொன்றேன்' என்றான். அதைக் கேட்ட நீதிபதி, அத் தண்டனையை மாற்றி வைத்தியனுக்கு விதித்தான்.

சிறிது நேரத்தில் அத் தனவான் வந்து 'வைத்தியன் குற்றவாளி அல்லன்; நானே குற்றவாளி' என்றான்.

அதைக் கேட்ட நீதிபதி ஒன்றுந் தோன்றாதவனாகித் திகைத்திருந்தான். அப் பாடகனும் மூர்ச்சை தெளிந்து எழுபவன் போல் எழுந்து வாந்தி யெடுத்தான். அச்சமயத்தில் அவனது தொண்டையில் சிக்கிக்கொண்டிருந்த கொட்டையும் வெளியே வந்து வீழ்ந்

தது. அதைக் கண்ட அனைவரும் அதிசயித்தார்கள். தனவான் முதலிய யாவரும் மன மகிழ்ந்து தங்கள் தங்கள் வீடு சென்றார்கள்.



# 17. சாலிவாகனன்

பெரிய அரசர்களில் சிலர் தோன்றிய காலத்தை முதலாகக் கொண்டு நம்மவர்கள் காலத்தை கணக்கிடுவார்கள். அப்படிப்பட்ட அரசர்களில் சாலிவாகனன் என்பவன் ஒருவன். இவன் தென்னாட்டை ஆண்ட அரசர்களில் சிறந்தவன். இவன் பிறந்து **1850** வருஷங்கள் ஆகின்றன. இவனைப் பற்றிய கதை ஒன்றுண்டு.

ஒரு கிராமத்தில் பிராமணன் ஒருவன் இருந்தான். அவன் சோதிடத்தில் வல்லவன். அவன் ஒரு பெண்ணை மணம் செய்து கொண்டு, அவளைத் தன் மாமனது வீட்டிலேயே விட்டுத் தன்னூர் சென்றிருந்தான். சிலநாள் கழித்து மறுபடியும் தன் மாமன் வீடு நோக்கி செல்லும்போது, வழியில் ஓராறு வெள்ளம் பெருகியோடியது. அதைக்கண்ட பார்ப்பனன் அவ்வாற்றங்கரையில் இருந்த ஒரு கிராமத்தில் தங்கினான்.

அக்கிராமத்தில் ஒரு குயவன் இருந்தான். அவனுக்கு ஒரு குமாரி யுண்டு. அவளுக் கேற்ற நாயகன் கிடைக்காமல் அக்குயவன் வருந்திக்கொண் டிருக்கும்போது, அந்தப் பிராமணனைப் பார்த்துத் தன் மகளை மணந்து கொள்ளும்படி கேட்டுக்கொண்டான். அப் பிராமணனும் தனக்குப் பிறக்கும் பிள்ளை அரசனாகுதற்குரிய நல்ல நேரத்தில் அவளை மணஞ் செய்துகொண்டான்.

சில ஆண்டுகள் சென்ற பின்னர், அவர் களுக்கு ஒரு பிள்ளை பிறந்தது. அப்பிள்ளை சக்கரவர்த்தி யாகுதற்குரிய அடையாளங்க ளோடு பிறந்திருந்தது. அதைக் கண்ட பிராமணன் அப்பிள்ளைக்குச் சாலிவாகனன் என்று பெயர் வைத்து, மகனையும் மனைவியை யும் குயவன் வீட்டிலேயே விட்டுச் சென்று விட்டான்.

குயவன் பேரனை அதிக அன்புடன் வளர்த்து வந்தான். அவன் வளர்பிறை போல, நாளுக்கு நாள் நன்றாக வளர்ந்தான். அவன் தனது சிறிய வயதில் விளையாட்டாக கத் தேர், யானை, குதிரை, வீரர்கள் முதலிய வற்றை மண்ணினால் செய்து வைத்தான்.

அக்காலத்தில் விக்கிரமாதித்தன் உச்சயி னியை ஆண்டுகொண் டிருந்தான். அவன்

கன்னியாகுமரி முதல் இமயமலை வரையுமுள்ள நாடுகளை வென்று சிறப்புற்றிருந்தான். அவன் கல்வியில் தேர்ந்தவன். ஆதலால் அவன் பண்டிதர்களையும் சோதிடர்களையும் மிகுதியும் ஆதரித்து வந்தான்.

சாலிவாகனன் பிறந்தவுடனே, உச்சயினியில் பல தீக்குறிகள் தோன்றின. வால் நட்சத்திரம் விழுந்தது. பூமி அதிர்ச்சி உண்டாயிற்று.

இவற்றைக் கண்ட அரசன் சோதிடரையும் பண்டிதரையும் அழைத்து, அதன் காரணம் என்னவென்று விசாரித்தான். அவர்களும் நன்ருய் ஆராய்ந்து அவைகளால் அரசனுக்குத் தீங்குண்டாகும் என்றனர்.

இதற்குள் சிலர் சாலிவாகனனது அற்புத சக்தியைக் கண்டுவந்து அரசனுக்கு அறிவித்தார்கள். விக்கிரமாதித்தனும் அதைக் கேட்டவுடன் தன் சேனைகளுடன் புறப்பட்டுச் சண்டைக்குப் போனுன். அதைக் கேட்ட சாலிவாகனன் தான் மண்ணுல் செய்த தேர், யானை, குதிரை, காலாள் முதலியவைகளுக்கு உயிர் தந்து அழைத்துக்கொண்டு சென்று விக்கிரமாதித்தனை எதிர்த்தான். சாலிவாகனன் வெற்றிபெற்றுன். விக்கிரமாதித்தன் தோல்வியடைந்தான். வென்றவன் விக்கிரமாதித்த

னுடைய நாடுகளைக் கைப்பற்றிக் கொண்டு ஆண்டு வந்தான். அவனது நாட்டில் காலம் தவறுமல் மழை பெய்தது. ஜனங்களும் சுகமாக வாழ்ந்திருந்தார்கள்.

இவன் அரசாண்ட காலத்தை ஓர் எல்லையாக வைத்து 'சாலிவாகன சகாப்தம்' என்று நமது தேசத்தில் காலத்தைக் கணக்கிட்டு வருகின்றனர்.



## 18. யானை

யானை நிலத்தில் வசிக்கும் பிராணிகள் எல்லாவற்றிலும் மிகுதியும் பெரியது. அது குதிரை, மாடு முதலிய மிருகங்களைப்போலவே வேலை செய்யும். நன்றாய் வளர்ந்த யானை ஏறக்குறைய பன்னிரண்டடி உயரம் இருக்கும். ஆனால் சில இடங்களில் யானைகள் ஏழு அல்லது எட்டடிக்கு மேல் வளர்வதில்லை.

யானைகள் இந்தியாவிலும் இலங்கைத் தீவிலும், சீனா, ஜாவா முதலிய தேசங்களிலும் காணப்படும். ஆப்பிரிக்காவில் காணப்படும் யானைகள், மற்ற தேசங்களின் யானைகளைவிட மிகச் சிறியவைகளாய் இருக்கும்.

மிகப்பருத்த யானை ஏறக்குறைய பதினைந்தடி நீளமுள்ளதாய் இருக்கும். அதன் சுற்

றளவு இருபத்து நான்கடி யிருக்கும். யானைக்கு மிகவும் பருத்த கனமான தலை உண்டு. அதன் கழுத்து மிகக் குறுகி யிருக்கும். அதனால் அது தலையைத் தாழ்த்த முடியாது. யானைகள் முகத்தில் அதிசயமான உறுப்பொன்று தொங்கிக்கொண் டிருக்கும். அதற்குத் துதிக்கை



அல்லது தும்பிக்கை என்று பெயர். அது எறக்குறைய எழடி நீளமுடையது. அது, யானைக்குக் கையாகவும் நாசியாகவும் உதவுகின்றது. அதன் நுனியில் விரல் போன்ற ஒரு உறுப்பு அமைந்திருக்கிறது. அந்த உறுப்பினால் யானை சிறிய பொருளையும் பொறுக்கி எடுக்கும். எந்த வேலையைச் செய்ய

வும் தும்பிக்கையே யானைக்கு உபயோகப் படுகிறது.

யானையின் கண்கள் மிகச் சிறியன. அதன் காதுகள் முறம்போல அகன்றிருக்கும். ஆண் யானைக்கு மேல்வாயின் இரண்டு பக்கங்களி லும் இரண்டு நீண்ட பற்களுண்டு. அவை களுக்குத் தந்தம் என்று பெயர். பெண் யானைக்குத் தந்தம் இல்லை. தந்தங்களைக் கொம்பென்றும் சொல்வதுண்டு. யானையின் தந்தம் அதிகவிலை யுள்ளது. யானையின் கால் கள் பெரிய தூண்கள்போல் இருக்கும். முன் காலில் ஐந்து விரல்களும் பின்காலில் நான்கு விரல்களும் இருக்கும்.

யானைகள் சாந்தமும் நன்றிபாராட்டுங் குணமும் உள்ளன. யானைகள் பெருங் காடு களில் சஞ்சரிக்கும். அவைகள் கூட்டங் கூட்ட மாய்ச் சஞ்சரிக்கும். அவைகள் கூட்டமாய்ச் செல்லும்போது வயதில் முதிர்ந்த யானைகள் முன்னும், குட்டிகள் இடையிலும், இளமை யான யானைகள் பின்னும் செல்லும். பெண் யானை இரண்டு மூன்று வருடத்திற்கு ஒரு முறை ஒரு குட்டி போடும். குட்டிக்கு யானைக் கன்று என்று பெயர். யானையின் கன்று பிறந்த வுடன் ஒரு பசுவின் கன்று போலிருக்கும். யானை நெடுங்காலம் வரையிலும் தன் கன்றுக் குப் பால் கொடுக்கும்.

யானை சாகபக்ஷிணி. அதற்கு இலை, தளிர், காய், கனி, தானியம் முதலியவை முக்கியமான உணவாகும். அது இரை தின்னும் போது, தன் உடலையும் துதிக்கையையும் அசைத்துக்கொண்டே யிருக்கும். இதனால் "யானை அசைந்து தின்னும்; வீடு அசையாமல் தின்னும்" என்னும் பழமொழி வழங்குகின்றது.

யானை மனிதருக்கு மிக்க உபயோகமுள்ளது. அது கனமான சாமான்களைச் சுமந்து செல்லும். காட்டில் வெட்டப்பட்ட மரங்களைக் கொண்டுபோய் குறித்த இடத்தில் சேர்க்கும். மரத்துண்டுகளை ஒன்றின் மேல் ஒன்றாக அடுக்கி வைக்கும். அரசர்கள் யானையை அலங்கரித்து, அதன் முதுகின் மேல் அம்பாரி வைத்து, அதில் ஏறிச் செல்வார்கள். யானைமீது ஏறிச் சென்று புலி வேட்டையாடுவதும் உண்டு. முற்காலத்தில் அரசர்கள் யானைகளைச் சண்டை செய்வதற்குப் பழக்கி வந்தார்கள். அரசர்களுடைய நால்வகைப் படையில் யானைப் படை முக்கியமானது. யானைத் தந்தத்தினால், பல்லக்குகள், பெட்டிகள், சிமிழ், பொம்மை, சீப்பு, கத்திப் பிடி முதலிய பொருள்கள் செய்யப்படுகின்றன.



# 19. பொறுமை

முன்னொரு காலத்தில் சோழநாட்டில் பெரும்பஞ்சம் உண்டாயிற்று. மூன்று ஆண்டு களாக ஒரு துளி மழையும் பெய்யவில்லை. ஏரிகள் கிணறுகள் எல்லாம் வறண்டுபோயின. மக்கள் உண்பதற்கு உணவில்லாமல் வருந்தி னார்கள். குடிப்பதற்கும் நீர் கிடைக்கவில்லை.

அப்போது சிரபுரம் என்ற ஒரு நகரில் ஆண்டான் அடிமை என்ற ஒரு பெரியவர் இருந்தார். அவர் அப்பஞ்சத்தின் கொடு மையை உணர்ந்து தமது வீட்டுக்கு வருபவர்க் கெல்லாம் உணவளிப்பதாகப் பறையறைவித் தார். இதைக் கேட்ட யாவரும் கூட்டம் கூட்ட மாய் அவருடைய வீட்டுக்குச் சென்றார்கள். எல்லோருக்கும் உணவளிக்கப்பட்டது. பஞ் சம் நீங்கும் வரையிலும் இவ்விதமாக உண வளித்து வந்தார்.

அவருடைய வீட்டில் வந்து உணவருந் திச் செல்பவர்களில் குணவதி என்ற ஒரு பெண் இருந்தாள். அவளுக்கு வயது பன்னி ரண்டு இருக்கும். அப்பெண் நல்ல குணங்க ளுடையவள். அவள் நாள்தோறும் கடைசி யில் சென்று உணவுண்டு தன் வீடு செல்வாள். அப்படிச் செல்லும்போ தெல்லாம் அப் பெரியாரை வணங்கிவிட்டுப் போவாள்.

ஒருநாள் யாவரும் உணவருந்திச் சென்று விட்டார்கள். குணவதியும் வழக்கம் போல பின்னே சென்று உணவுண்டபின் அப் பெரியாரை வணங்கினுள். அப்பெரியார் அவளுக்கு ஒரு ரொட்டியைக் கொடுத்து அனுப்பினுர்.

குணவதி தனது வீடு சென்றவுடனே மிகுந்த பசியோடிருந்த அவளது தாய் அந்த ரொட்டியை வாங்கித் தின்பதற்குப் பாதியாகப் பிட்டாள். அதைப் பிட்டவுடனே அதிலிருந்து ஐந்து சவரன் கீழே விழுந்தது. அதைக்கண்ட அவளது தாய் குணவதியைப் பார்த்து "அம்மா, இந்தச் சவரன்கள் தவறுதலாக ரொட்டியினது மாவில் வீழ்ந்திருக்கும்; நீ விரைந்து சென்று இந்தப் பணத்தைக் கொண்டு போய்க் கொடுத்துவா" என்று சொல்லி, குணவதியை அனுப்பினுள்.

குணவதியும் தனது தாயார் சொன்னபடியே அந்தப் பெரியார் வீட்டுக்குப்போய் அப்பணத்தைக் கொடுத்தாள். அப்பெரியார் அச்சாவரனை வாங்காமல், அப் பெண்ணைப் பார்த்து "உனது சிறந்த குணத்துக்கு மெச்சி அப்பொருளை உனக்கு வைத்துக் கொடுத்தேன். அப்பொருள் உன்னுடையதுதான். இப்பொழுது இருப்பதுபோலவே நீ எப்பொழுதும் பொறுமையாய் இருக்கவேண்டும்.

எப்பொழுதும் கிடைத்ததைக் கொண்டு திருப்தி யடைய வேண்டும். அப்போது யாவரும் உனக்கு உதவி செய்வார்கள். கடவுளும் உனக்கு அருள் செய்வார்" என்று சொல்லி, இன்னும் சில பொருள்களையும் அவளுக்குக் கொடுத்தனுப்பினார். குணவதியும் மனமகிழ்ச்சியடைந்து வீடு சென்றாள்.



# 20. தேசிங்கு ராஜன்

சில காலத்திற்குமுன் செஞ்சிக் கோட்டையில் அரசு செய்துகொண்டிருந்த அரசர்களுள் தேசிங்கு ராஜன் என்பவன் மிகுந்த கீர்த்தி பெற்றவன். அவ்வரசர்கள் யாவரும் ஆற்காட்டு நவாபின் அதிகாரத்திற்கு அடங்கியவர்களாய், டில்லிச் சக்கரவர்த்திக்குக் கப்பங் கட்டிக்கொண்டு வந்தார்கள். ஆனால் அவர்களில் ஒருவனது அரசாட்சியில் கப்பம் செலுத்தப்படவில்லை. அதைக் கண்ட டில்லிச் சக்கரவர்த்தி செஞ்சி யதிபதியோடு போர் செய்யும்படி சைரோப் சிங் என்பவனை அனுப்பினார். அவனும் செஞ்சிக்குச் சென்று அவ்வரசனை வென்று அக் கோட்டையைக் கைப்பற்றினான். அதனைக் கேட்ட சக்கரவர்த்தி, அவனையே செஞ்சிக்கு அதிபதி யாக்கினார்.

அப்பொழுது டில்லிச் சக்கரவர்த்திக்கு விலையுயர்ந்த ஒரு குதிரை கிடைத்தது. ஆனால் ஒருவராலும் அதனை அடக்க முடியவில்லை. அதைக் கண்ட சக்கரவர்த்தி மிகுதியும் வருத்த முற்று, குதிரையை அடக்க முயன்று பின்னிட்டவர்களை யெல்லாம் சிறையில் அடைப்பித்தார். செஞ்சி யதிபதியாகிய சைரோப் சிங்கும் டில்லிக்குச் சென்று குதிரையை அடக்க முடியாமல் சிறைப்பட்டான்.

அவன் டில்லிக்குப் போயிருந்தபோது அவனது மனைவி ஓர் ஆண் குழந்தையைப் பெற்றாள். அக் குழந்தையே பின்னர் தேசிங்கு ராஜன் என்று சிறந்து விளங்கினான். பிற்பாடு வயது வந்ததும் தேசிங்கு ராஜனும் டில்லிக்குச் சென்று அக்குதிரையை அடக்கி அதன் மேல் எறி உட்கார்ந்தான். அப்போது சக்கரவர்த்தி அதிக சந்தோஷங்கொண்டு அவனது தகப்பனையும் சிறையினின்று விடுவித்ததுமன்றி அக் குதிரையையும் தேசிங்கு ராஜனுக்கே கொடுத்து "நீ கப்பங் கட்டாமல் சுதந்தரமாகச் செஞ்சியை ஆண்டுகொண்டிரு" என்று உத்தரவும் கொடுத்தான்.

இதைக்கேட்ட ஆற்காட்டு நவாபு பொறாமைகொண்டு, அவனை எளிதில் அடக்கிவிடலாமென்றெண்ணிக் கப்பம் செலுத்தும்படி

கேட்டான். அப்பொழுது தேசிங்கு, தனக்கு சக்கரவர்த்தி சுதந்தரமாக அரசாளும்படி அதிகாரம் கொடுத்து விட்டார் என்ருன். நவாபு மறுபடியும் வற்புறுத்திக்கேட்க, தேசிங்கு கடுங் கோபங் கொண்டு தன்னோடு சண்டை செய்து கப்பத்தைப் பெற்றுப் போகலாம் என்று சொல்லி அனுப்பினுன்.

நவாபும் சண்டைசெய்வதற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்துகொண்டிருந்தான். தேசிங்கு ராஜனும் வழக்கம்போல இராஜ காரியங்களைச் செவ்வையாக நடத்திக் கொண்டு வந்தான்.

இவ்வாறிருக்கையில், நவாபு திடீரென்று வந்து செஞ்சியை வளைத்துக் கொண்டான். அதை யறிந்த சிலர் ஓடிவந்து தமது அரசனுக்கு அறிவித்தார்கள். அப்பொழுது தேசிங்கு தனது இஷ்ட தெய்வமாகிய இரங்கநாத சுவாமியைப் பூசித்துக்கொண்டிருந்தான்.

தேசிங்கு ராஜனுடைய சிற்றப்பன் முதலியோர்கள் வந்து நவாபுடன் சமாதானம் செய்து கொள்ளும்படி எவ்வளவு சொல்லியும் கேளாது, தேசிங்கு மிகுந்த கோபத்துடன் போருக்குப் புறப்பட்டான். அப்பொழுது அவனது மனைவியும் தடுத்தாள். அதனையும் கேட்காமல் தனது சேனைகளுடன் புறப்பட்டுச் சென்று நவாபை எதிர்த்தான்.

செஞ்சிக்கு நான்கு மைல் தூரத்திலுள்ள பத்துப்பட்டு என்னும் ஊருக்கருகில் சண்டை நடந்தது. முதலில் தேசிங்கு வெற்றி பெற்ருன். நவாபைக் கொன்றுவிட்டதாக எண்ணிக்கொண்டு திரும்பி வருகையில் நவாபு உயிரோ டிருக்கின்ருன் என்று தெரிந்தது. உடனே தேசிங்கு திரும்பிச் சென்று மறுபடியும் நவாபுடன் சண்டை செய்ய முயற்சி செய்யும்போது மறைவில் ஒளிந்திருந்த பகைவன் ஒருவன் தேசிங்கைச் சுட்டுக் கொன்ருன்.

அது தெரிந்த அவனது மனைவியும் அவனுடன் உடன்கட்டை ஏறிஞள். பிள்ளைகளே! இவன் ஒரு வீரனல்லவா?



## 21. ஔவையார்

வெகுகாலத்திற்கு முன் நமது தமிழ் நாட்டில் ஔவையார் என்ருெரு பாட்டியார் இருந்தார். ஔவையார் என்ற சொல்லுக்குப் பாட்டியார் என்பது பொருள். இவரது பெயர் இன்னது என்று தெரியவில்லை. இவரைப் பற்றிக் கேள்விப்படாதவர்களும் உண்டோ? ஏறக்குறைய நமது நாட்டுப் பெண்கள் எல்லோரும் ஔவயாரைக் குறித்துப் பல கதைகள் சொல்லுவார்கள்.

முற்காலத்தில் கல்வியிற்சிறந்த பெண்கள் பலர் நமது நாட்டில் வாழ்ந்திருந்தார்கள். இவர்களில் சிறந்தவர் நமது ஔவையார்.



ஆத்திசூடி, கொன்றைவேந்தன் முதலிய நூல்களை இயற்றியவர் ஔவையார் என்பது உங்களுக்குத் தெரியும். இவரது நூல்கள்

நமக்கு அறிவையும் ஒழுக்கத்தையும் ஒருங்கே புகட்டுகின்றன.

இப்படிப்பட்ட அறிவு நூல்களை இயற்றிய ஔவையார் எவ்வளவு அறிவாளியாக இருந்திருக்கவேண்டும்! அவர் அக்காலத்தில் வழங்கிய நூல்களைச் செவ்வையாகக் கற்றறிந்தவர். தேசங்கள் தோறும் சஞ்சாரம் செய்து பலவிஷயங்களையும், இயற்கைப் பொருள்களையும், மக்களின் இயல்புகளையும் நன்கு அறிந்தவர். அவர் கல்வி ஞானத்தோடு உலக ஞானமும் அறிந்தவர். இதனால்தான் அவரது பாடல்கள் படிக்கப் படிக்க இன்பந் தரும்.

ஔவையார் யாவரிடத்தும் அதிக அன்புடையவர். வறியவர் செல்வர் என்ற வித்தியாசமின்றி யாவருக்கும் நன்மையே செய்வார். தீயவர்களைச் சீர்ப்படுத்துவார். யாவரிடத்தும் இனிதாகப் பேசுவார். அவர் மிகவும் இரக்கம் உடையவர்.

நமது நாட்டின் மக்களுக்கு அவசியமான தொழில் விவசாயம் அல்லவா? எல்லாத் தொழிலுக்கும் அடிப்படையான தொழில் விவசாயமே யாகும். இதனை நமது ஔவையார் நன்கு அறிந்திருந்தார். ஆதலால் அவர் எப்பொழுதும் விவசாயத்தைப் பெருக்க வேண்டுமென்று யாவருக்கும் புத்திபோதிப்

பார். ஒருவனுக்குச் சிறப்பைத் தருவது உழவுத் தொழிலே என்பார். உழவுத் தொழிலின்றி ஒரு நாடு ஓங்காது என்றுரைப்பார். "சீரைத் தேடின் ஏரைத் தேடு," "தொழுதூண் சுவையின் உழுதூண் இனிது,, என்பன போன்றவை அவரது அமுத மொழிகளல்லவா?

தமிழ் நாட்டில் ஔவையாரைத் தெய்வமாகப் பாராட்டுவர். நமது நாட்டுப் பெண்கள் அவர் பெயரால் ஒரு விரதம் இருப்பார்கள். அவ் விரதத்தன்று ஆண்மக்கள் அங்கு செல்லலாகாது.

பிள்ளைகளே! நமது ஔவையார் சொன்ன அமுத மொழிகளை அன்புடன் கற்று அதன்படி ஒழுகுவீர்களாக.



## 22. தண்ணீர்

நாம் காற்றில்லாவிடில் சில நிமிஷங்கள் கூட உயிரோடிருக்க முடியாது. தண்ணீர் இல்லாவிடினும் சில தினங்களுக்குமேல் உயிர் வாழ்வது அரிது. ஆதலால் தண்ணீர் நமக்கு மிகவும் அவசியமானது, உணவுப் பதார்த்தங்கள் உண்டாவதற்கும், அவைகளைச் சமைப்பதற்கும் தண்ணீர் அவசியமானது.

இத் தண்ணீர் ஆறுகளிலும், குளங்களி லும், ஏரிகளிலும் நிரம்பி யிருக்கிறது. கிணற் றுத் தண்ணீரும் கூடிய மட்டிலும் அசுத்த மில்லாதது. ஆழமில்லாத கிணற்றுத் தண் ணீர் அசுத்தமானது. ஆழமில்லாத கிணற் றுத் தண்ணீரைக் காய்ச்சிக் குடிக்கவேண்டும் கலங்கிய ஆற்று நீரையும், பாசி, தாமரை முதலியவைகள் நிறைந்த குளத்து நீரையும் நன்றாய்க் காய்ச்சி கொதிக்கவைத்து ஆற்றிக் குடிக்கவேண்டும்.

மழைநீர் சுத்தமானதுதான். ஆனால் அது கீழேவிழும் இடத்திலுள்ள தூசிகளா லும், கரையும் பொருள்களாலும் கெட்டு விடு கிறது. நல்ல தண்ணீருக்கு சுவையும் இல்லை, மணமும் இல்லை. ஆனால் அது எந்த நிலத் தில் இருக்கின்றதோ அந்த நிலத்தின் நிறத்தை யடையும்.

சுத்தமான தண்ணீரில் ஆடுமாடுகளைக் குளிப்பாட்டுவதாலும், அழுக்குத் துணிகளைத் துவைப்பதாலும், அசுத்தம் பண்ணுவதா லும் அதிகமாகக் கெட்டு அபாயத்தை உண்டு பண்ணும். ஆதலால் குளங்கள், ஏரிகள் முதலியவைகளை அசுத்தப்படுத்தாமல் பாது காக்க வேண்டும். தண்ணீரைப் பாதுகாத்தற் குரிய சில வழிகள் — இலைகள் உதிர்ந்து தண் ணீரைக் கெடுக்கும்படி மரங்களை ஓரங்களில்

வைத்திருக்கலாகாது. அழுக்குத் தண்ணீர் வந்து வீழாதபடி சுற்றிலும் சுவர் இருத்தல் வேண்டும். சலதாரை நீரையும் விடலாகாது. கிணற்றைச் சுற்றிலும் குப்பைகளும் சாக்கடையும் கக்கூசும் இருக்கக் கூடாது. கிணற்றில் இறங்கிக் குளிக்கக் கூடாது. குடி தண்ணீரில் கை கால் கழுவுதலும் எச்சில் உமிழ்தலும் கூடாவாம்.



## 23. தேகப் பயிற்சி

மனிதர்களிற் சிலர் தொழில் செய்கிறார்கள். சிலர் உத்தியோகம் செய்கிறார்கள். சிலர் தாய் தந்தையர் தேடிவைத்திருக்கும் பொருளைக் கொண்டு உண்டு உடுத்து காலத்தைச் சுகமாகக் கழிக்கிறார்கள். இவர்களில் கைத் தொழில் செய்கிறவர்களுக்குத் தேக உழைப்பு அதிகம். உத்தியோகம் செய்கிறவர்களுக்கு மனோவுழைப்பு அதிகம். சுகமாக வாழ்பவர்களுக்கு இவ்விருவித வுழைப்புமில்லை.

மனோபலம் மாத்திரம் இருந்து தேக பலம் இல்லாதுபோனால் ஒன்றும் பயனில்லை. உபாத்தியாயர், கணக்கு எழுதுபவர் முதலியோர் மனோ முயற்சி உடையவர்கள். மாணாக்கர்கள் கல்வி கற்பவர்கள். இவர்கள் எல்லாம்

இவர்கள் சக்திக்குத் தக்க தேகப்பயிற்சிகளைக் கொள்ளுதல் வேண்டும். சுக ஜீவி களும் அவரவர் நிலைக்குத் தக்க உழைப்பைக் கை யாளுதல் வேண்டும். இவர்கள் தேகப் பயிற் சியைக் கையாளாவிட்டால், இவர்களது உடல் மெலிந்து உரம் குன்றி நாளடைவில் சக்தியற் றவர்களாகி விடுவார்கள். சுவரை நன்றாக வைத்துக்கொண்டு சித்திரம் எழுதவேண்டும். அதுபோல உடலைச் செவ்வையாகப் பாது காத்துக்கொண்டு தங்கள் தங்கள் காரியங்களைச் செய்தல் வேண்டும். ஆதலால் ஒவ்வொரு வருக்கும் தேகாப்பியாசம் அவசியமானது.

தேகாப்பியாசம் செய்வதற்குரிய காலம் காலையும் மாலையுமேயாம். மாலை நேரத்தைப் பார்க்கிலும் காலை நேரமே ஏற்றது. ஏனெ னில் காலையில் உற்சாகமாய் இருக்கும். சுறு சுறுப்பாக எதையுஞ் செய்யலாம். மாலையில் அவரவர் தங்கள் தங்கள் வேலையிலமர்ந்து அயர்ந்திருப்பார்.

ஆதலால் மனோபலத்தை அடைய விரும்புவோர் தேகபலத்தையும் அடைய விரும்புவது அவசியமாகும்.

தேகாப்பியாசம் பலவகைப்படும். அவ ரவர் வயதுக்குத் தக்கவாறும், இயல்புக்குத் தக்கவாறும் பலவித பயிற்சிகளைக் கொள்ளல் வேண்டும். சிறுவர்கள், பந்தாடுதல், ஓடுதல்

குதித்தல் முதலியவைகளைச் செய்தல் வேண்டும். வாலிபர்கள், தங்கள் வயதுக்குத் தக்கபடி பெரும்பந்தாடுதல், கசரத்து செய்தல், மல்யுத்தம் செய்தல், சிலம்பம் விளையாடுதல் முதலியன செய்யலாம். வயது சென்றவர்கள் நடத்தல் வேண்டும். செல்வர்கள் குதிரைச் சவாரி செய்யலாம். தொழிலாளிகள் தொழில் செய்வதனால் அவர்களுக்கு அது வேண்டியதில்லை. கிராமக் குடியானவர்கள் எப்பொழுதும் வேலை செய்துகொண் டிருத்தலால் அவர்களுக்கும் வேண்டியதில்லை. சுருங்கச் சொல்லுமிடத்து நாட்டுப் புறத்தார்களைப் பார்க்கிலும் நகரவாசிகளுக்கு தேகப்பயிற்சி அவசியமானது. நாட்டுப்புறத்தார் உழைப்பினால் திடகாத்திரராய், பலசாலிகளாய் விளங்குவதையும் நகரவாசிகள் பலவீனர்களாய் எப்பொழுதும் நோய்வாய்ப்பட்டு வருந்துதலையும் காணலாம். ஆதலால் பிள்ளைகளே! நீங்கள் தினமும் தேகப் பயிற்சி செய்தல் வேண்டும். தேகப் பயிற்சி செய்வதால் நாம் உண்ட உணவு ஜீரணமாகும். இரத்தம் உடலெங்கும் பரவும். கெட்ட நீர் வியர்வையாக வெளிவரும். ஆரோக்கியமா யிருக்கும். உடம்பு வலிமை பெறும். மனோதைரியம் விருத்தியாகும். நாம் எடுத்துக்கொண்ட காரியத்தை இனிது முடிக்கலாம்.



## 24. வாத்து

வாத்து பறவை இனத்தைச் சேர்ந்தது. இதில் பலவகை உண்டு. பெரிய வாத்து, குள்ள வாத்து, காட்டு வாத்து முதலியனவாம்.

பெரிய வாத்துக்கும் குள்ள வாத்துக்கும் பறப்பதற்குத் தகுந்த சிறகுகள் இல்லே. ஆதலால் அவை தரையில் சஞ்சரிக்கும். பெரிய வாத்துக்களுடைய சிறகுகள் தூய வெண்ணிறமா யிருக்கும். அதன் அடிகள் சிவந்து பசையுள்ளதா யிருக்கும். ஆதலால் பெரிய வாத்துக்கள் பார்ப்பதற்கு அதிக அழகா யிருக்கும். ஆனல் குள்ள வாத்துக்கள் பார்ப்பதற்கு அழகாயிரா.

காட்டு வாத்து உயரப் பறக்கும். தரையில் நடமாடாது. காட்டு வாத்து ஏரிகளிலும் குளங்களிலும் கூட்டங் கூட்டமாய்ச் சஞ்சரிக்கும்.

வாத்துக்களின் அலகுகள் அகன்று நீண்டு தட்டையா யிருக்கும். அதனால் வாத்து நீரிலும் நிலத்திலும் உள்ள புழு பூச்சிகள் முதலியவைகளைப் பற்றித் தின்னும். புழுக்களைப் பிடிப்பதன் பொருட்டு அது தன் அலகினால் தண்ணீரைக் கிளறும். கலங்கிய சேற்றைப் புழுக்களோடு வாயினுள் இழுக்கும். வாத்தின் அலகுகளின் இரு பக்கங்களிலும் மிருதுவான சிறிய முட்கள் உண்டு. இரண்டு அலகுகளும் ஒன்று சேரும்பொழுது அவைகளி னிடையே சிறிய துவாரங்கள் காணப்படும். அதன் வழியாக நீரும் சேறும் கீழே வழிந்து விடும். வாய்க்குள் அகப்பட்டவைகளைத் தின்றுவிடும்.

வாத்துக்களின் உடல் பெரிதா யிருக்கும். அவ்வுடலுக்குத் தகுந்த கால்கள் இல்லை. அதன் கால்கள் குட்டையா யிருக்கும். ஆதலால் அது பூமியில் விரைவாக நடக்க முடியாது. அதன் இறகுகளில் ஒரு வகையான நெய்ப் பசையுண்டு. அதனால் அது தண்ணீரில் நீந்தினாலும் இறகுகள் நனைய மாட்டா. வாத்தின் பாதங்களில் விரல்கள் உண்டு. அவை ஒருவகை மிருதுவான தோலினால்

இணைக்கப்பட் டிருக்கும். அத் தோல்கள் மின்னலைப் போன்ற நிறமுடையதா யிருக்கும். விரல்களின் நுனி சிறிதா யிருக்கும். இவை களின் உதவியினால் வாத்துக்கள் தண்ணீரில் மிக சுலபமாக நீந்தும். நீந்தும்போது அதன் பாதங்கள் துடுப்புப்போல உதவும்.

வாத்து முட்டை யிட்டுக் குஞ்சு பொரிக் கும். வாத்துக்களை வீட்டில் வளர்ப்பார்கள். வாத்து முட்டைகளைக் கோழிகள் அடைகாத் துக் குஞ்சு பொரிக்கும்படி செய்வார்கள். சிலர் வாத்து முட்டைகளைத் தின்பார்கள். சிலர் வாத்தையும் கொன்று தின்பார்கள்.



## 25. காற்று

எல்லா உயிர்களும் வாழ்வதற்கு மிகவும் அவசியமானவை காற்று, தண்ணீர், உணவு ஆகிய மூன்றுமே. இந்த மூன்றும் எல்லா உயிர்களுக்கும் எப்போதும் வேண்டியவை. நாம் உணவு இல்லாமல் சில நாள் உயிருடன் இருக்கலாம். தண்ணீர் இல்லாமல் நாம் சில மணி நேரம் உயிர் வைத்திருக்கலாம். ஆனால் காற்று இல்லாமல் அரைக் கணமும் வாழ முடியாது. ஆதலால் இந்த மூன்றிலும் காற்றே நமது உயிர் வாழ்வுக்கு மிகவும் அவ

சியமென்பது விளங்கும். காற்று நமக்கு அவசியமா யிருப்பது போலவே, புல் பூண்டு செடி கொடிகளுக்கும் காற்று அவசியமானது. காற்று இல்லாத இடத்தில் ஒன்றும் வாழ இயலாது.

காற்றுக்கு வாயு என்று பெயர். காற்று. எங்கும் பரவி யிருக்கிறது. அது இல்லாத இடமில்லை. ஆனால் அது நமது கண்ணுக்குத் தெரிவதில்லை. காற்று அசைந்தால் நமக்குத் தெரியும். அது அசையா திருக்கும் பொழுது, நமக்குத் தெரிவதில்லை. நாம் ஒரு விசிறியைக் கொண்டு விசிறினால் காற்று இருப்பது நன்றாய்த் தெரியும். பிள்ளைகளே! நீங்கள் இரயிலில் ஏறிச் செல்வதாக வைத்துக் கொள்ளுங்கள். நீங்கள் வண்டியில் ஏறி உட்கார்ந்ததும் காற்றைக் காண மாட்டீர்கள். வண்டி புறப்பட்டுச் செல்லும்போது காற்று வீசுவதை நீங்கள் அறிந்து கொள்வீர்கள். அப்பொழுது காற்று இருக்கிறது என்று காண்பீர்கள். இதனால் காற்று எங்கும் இருக்கிறது என்று தெரிகிற தல்லவா ?

உலகத்தில் வாழும் எல்லாப் பிராணிகளும் வாழ்வதற்குக் காற்று அதிக அவசியமானது. ஆனால் அந்தக் காற்று சுத்தமாக இருக்க வேண்டும். ஒவ்வொரு உயிர்ப் பிராணிகளும் சுத்தமான காற்றையே உட்கொள்ளுகின்றன.

இவ்வாறு உட்கொள்ளும் காற்று பிராண வாயு எனப்படும். இவ்வாறு உட்கொள்ளப்படும் பிராணவாயு உடலில் இருக்கிற அசுத்தங் களைக் கொண்டு வெளியே வருகின்றது. நாம் வெளியே விடும் காற்றெல்லாம் இவ்வாறு அசுத்தங்களைக் கொண்டுவரும் அசுத்தகாற்றே யாகும். இந்த அசுத்தமான காற்று வெளியே பரவுதலால் வெளியிலுள்ள சுத்தமான காற் றும் அசுத்த மடைகின்றது. ஆனால் செடி கொடி முதலிய தாவரங்கள் நாம் வெளிவிடும் அசுத்தமான காற்றையே உட்கொள்ளுகின்றன; சுத்தமான காற்றை வெளி விடுகின்றன. ஆகவே தாவரங்கள் அசுத்தமான காற்றை உட் கொண்டு சுத்தமான காற்றை வெளிவிட்டு நமக்கு நன்மை செய்கின்றன. இப்படியாக நமக்கு நன்மை செய்யும் தாவரங்களை நாம் பாதுகாப்பது நமது கடமையல்லவா? ஆத லால் நாம் தாவரங்களின் வளர்ச்சிக்காகப் பாடு படவேண்டும்.

நாம் எப்பொழுதும் சுத்தமான காற் றையே உட்கொள்ள வேண்டும். அந்தக் காற்று நமது உடம்பிலுள்ள அசுத்தத்தில் பெரும்பாகத்தை அப்புறப்படுத்தும். நமது உடம்பிலுள்ள அசுத்தம் வெளியில் வராவிட் டால் நோய்கள் உண்டாகும்.

ஆதலால் நாம் எப்பொழுதும் காற்றோட்டமான இடத்திலேயே வசிக்க வேண்டும். நாம் எப்பொழுதும் நமது வீடுகளை மேடான இடத்தில் விசாலமாகக் கட்டவேண்டும். வீடுகளை நெருக்கமாகக் கட்டக் கூடாது. வீட்டில் காற்றோட்டத்திற்காக பலகணிகள் அதிகமாக அமைக்க வேண்டும். நாம் படுக்கும் அறைகளில் அதிகமான சாமான்களை வைக்கலாகாது. நாம் உறங்கும்போது மூக்கின் வழியாகச் சுவாசிக்க வேண்டும். வாய் வழியாகச் சுவாசிக்கக் கூடாது.

**சுத்தம் சுகம் தரும்.**



## 26. அதிவீர ராம பாண்டியன்

மதுரை திருநெல்வேலி ஜில்லாக்களுக்குப் பாண்டிய நாடு என்று முன்னோர்கள் பெயரிட்டழைத்தார்கள். பாண்டிய நாட்டை ஆண்ட அரசர்கள் பாண்டியர் என்று அழைக்கப்பட்டார்கள். அந்தப் பாண்டிய மன்னர்களில் அதிவீர ராம பாண்டியர் ஒருவர். அவர் திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள தென்காசி என்னும் நகரில் இருந்து அரசாண்டு வந்தார். அவரது தமையனார் வரதுங்க ராம பாண்

டியர். அவர் திருக்கருவை என்னும் பதியி லிருந்து அரசு செய்து வந்தார். இவ்விரு வரும் சிற்றரசர்கள். ஆதலால் மதுரையை ஆண்ட பாண்டியருக்குக் கப்பம் செலுத்தி வந்தார்கள்.

அதிவீர ராம பாண்டியர் தமது இளம் பருவத்திலேயே அரசருக்கு வேண்டிய கல் வியை நன்ருகக் கற்றுணர்ந்தவர். நாம் பேசும் தமிழ் மொழியிலுள்ள சிறந்த நூல்களையும் நன்கு கற்றுணர்ந்தவர். சம்ஸ்கிருதத்திலும் சிறந்த அறிவுடையவர். தமிழ் மொழியை நன்ருகக் கற்றதற்கேற்ப சிறந்த தமிழ்ப் பாடல் கள் பாடும் திறமையும் உடையவர்.

அதிவீர ராம பாண்டியர் தமது கவிபாடும் திறமைக் கேற்ப ஒரு நூல் இயற்றினர். அதற்கு நைடதம் என்று பெயர். அந்த நூல் நளனுடைய கதையைச் சொல்லும். அவர் அதிக சிறப்பாக நள மகாராசனைப் புகழ்ந்து பாதி நூல் வரையிலும் பாடினர். அதைத் தமது தமையனருக்குக் காட்டினர்.

வரதுங்க ராம பாண்டியரும் தம்பி பாடிய நூலைப் படித்துப் பார்த்தார். படித்துப் பார்த்த பின் தம்பீ, கடவுளைத் துதித்துப் பாடாமல் மனிதனைப் புகழ்ந்து பாடி யிருக்கின்றனையே ! என்று உரைத்து வருந்தினர். அதைக்கேட்ட

பாண்டியர் தமது ஊக்கம் குறைந்தார். அத னல் அந்த நூலை ஒருவாறு பாடி முடித்தார்.

அரச குலத்தி லுதித்த ஆண் மக்களும் பெண் மக்களும் கல்வி கற்றிருப்பார்கள். ஏனென்றல் கற்றவர் பலர் அரசர் சமஸ்தா னங்களில் இருப்பார்கள். ஆதலால் அவர்கள் எளிதில் கல்வி கற்றுக் கொள்வார்கள். அவ ரது மதினியாரும் தமிழில் சிறந்த தேர்ச்சி பெற்றவர். ஆதலின் அவரிடத்தில் பாண்டி யர் தாம் பாடிய நூலைக் காட்டினர். அந்த அம்மையாரும் அதைப் படித்துப் பார்த்து விட்டு, "உமது நூல் வேட்டை நாய் காட்டுக் குச் செல்லும்போது ஊக்கத்தோடு சென்று, மீண்டு வரும்போது இளைத்துப் போய் வரு வதை ஒத்திருக்கிறது" என்றார். அதைக் கேட்டதும் அதிவீர ராம பாண்டியருக்குப் பெருங் கோபம் வந்து விட்டது. உடனே அவர் தென்காசிக்குச் சென்று பெரும் படை திரட்டிக்கொண்டு தமது தமையனரோடு சண் டைக்கு வந்தார். அதை அறிந்த வரதுங்கர் "அருமைத் தம்பியே, பரதனைப்போல் நட" என்று ஒரு செய்யுளை ஒரு ஓலையில் எழுதி அனுப்பினர்.

அதிவீர ராம பாண்டியர் அந்தப் பாட் டைப் படித்துப் பார்த்தார். தமது தமைய

ஞரின் சிறந்த குணங்கள் அவருக்குப் புலப் பட்டன. உடனே அவர் கோபம் தணிந்து, தமது தமையனாரிடத்தில் மன்னிக்கும்படி வேண்டிக்கொண்டார். அவர் இன்னும் பல நூல்களை இயற்றி யிருக்கிறார்.

பிள்ளைகளே! நீங்கள் படிக்கும் வெற்றி வேற்கை என்னும் நீதி நூலைப் பாடியவர் இவரே. இந்த நூலில் பல நீதிகள் சொல்லப் பட்டிருக்கின்றன. நீங்களும் இந்த நூலைப் படித்து அதன்படி நடந்து நல்ல பிள்ளைகளாக வாழ்வீர்களாக.



## 27. காகிதம்

பிள்ளைகளே! நீங்கள் நாள்தோறும் பாட சாலைக்குச் சென்று படித்து வருகின்றீர்கள் அல்லவா? நீங்கள் எதற்காகப் படிக்கின்றீர் கள்? உங்களது அறிவை வளர்ப்பதற்கல்லவா? அறிவு வளர்ச்சிக்கேற்ற பல சிறந்த புத்தகங் கள் வேண்டுமல்லவா? புத்தகங்களை அச்சடிக் கக் காகிதம் வேண்டும். காகிதம் எவ்வாறு செய்யப்படுகிறது?

முற்காலத்தில் நமது நாட்டிலிருந்த நம் முன்னோர்களில் பலர் எழுதப் படிக்கத் தெரி யாதவர்களா யிருந்தார்கள். ஒரு சிலர் எழுதப் படிக்கத் தெரிந்தவர்களா யிருந்தார்கள். அவர்

களும் புத்தகங்களை வைத்துப் படிக்கவில்லை. அக்காலத்தில் பனை ஓலையில் எழுத்தாணி கொண்டு எழுதிப் படித்து வந்தார்கள். அவ் வேடுகளே புத்தகங்களா யிருந்தன. அந்த ஏடுகளும் சிலரிடத்தில் மாத்திரம் இருக்கும்.

அக் காலத்தில் கல்வி கற்பது எளிதல்ல. கற்றவர்களைக் காண்பது அரிதாய் இருக்கும். கல்வி கற்க விரும்புவோர் நெடுந்தூரம் சென்று வருந்திக் கற்பார்கள். ஐரோப்பாக் கண்டத்தில் உள்ளவர்கள் ஆதிகாலத்தில் தோலில் எழுதிப் படித்தார்களாம். இன்னும் சிலர் மரப் பட்டையினுல் காகிதம் செய்யவும் தெரிந்திருந்தார்கள்.

இவ்வாறு மனிதர்கள் எழுதிப் படித்து வரவே, நாளடைவில் காகிதம் செய்யத் தெரிந்துகொண்டார்கள். முதலில் அவர்கள் பருத்திப் பஞ்சையும் கந்தைத் துணியையும் நன்ருய் ஊறவைத்து அரைத்து மாவாக்கிக் காகிதம் செய்து வந்தார்கள். இவ்வாறு பல ஆண்டுகள் செல்ல மனிதர்கள் தமது கூரிய அறிவால் பலவகைப் பொருட்களையும் சேர்த்துக் காகிதம் செய்கிருர்கள்.

புல், சணல் நார், சணல் இலை முதலிய பல பொருள்களைச் சேர்த்து மலிவான காகிதம் செய்யலாம்.

சில நாட்டில் கையினலே காகிதம் செய்யப் படுகிறது. இந்தக் காகிதம் அவ்வளவு நயமாக இராது. நயமான காகிதம் செய்வதற்கு இயந்திரங்கள் வேண்டும். நம்முடைய நாட்டில், கல்கத்தாவில் பெரிய காகித ஆலைகள் இருக்கின்றன. அவ் வாலையிலுள்ள இயந்திரங்கள் அரைத்த மாவை நயமான காகிதங்களாக மாற்றி விடுகின்றன.

இப்பொழுது காகிதம் நமக்குப் பலவகையிலும் உபயோகப் படுகிறது. காகிதத்தில் எழுதுகிறோம்; படம் வரைகிறோம்; அச்சடித்துப் புத்தகங்கள் செய்கிறோம். காகிதத்தினல் பட்டம், காற்றாடி முதலிய விளையாட்டுப் பொருள்களைச் செய்கிறோம். காகிதத்தால் பெட்டி செய்கிறோம். காகிதத்தால் பலவகைப் பூக்கள் செய்யலாம். காகிதத்தில் பல நிறங்களுண்டு. அவை பார்ப்பதற்கு மிக அழகாக இருக்கும்.





## 28. மயில்

மயில் அழகான பறவை. இது பறவை இனத்தில் கோழியைச் சேர்ந்தது. இந்த மயிலைக் கோவில்களிலும், அரசரது அரண் மனைகளிலும், சீமான்கள் மாளிகைகளிலும் காணலாம். சாதாரணமாக மயிலைக் காடுகளில் கூட்டம் கூட்டமாய்ப் பார்க்கலாம். காடுகளில் தான் அவை மிகுதியாக வசிக்கும். வெப்ப மான நாடுகளில் மிகுதியும் காணப்படும். வேடர்கள் மயிலைத் தந்திரமாகப் பிடிப்பார்கள். நாடுகளில் கொண்டுவந்து விற்பார்கள்.

பாலர்களே! படத்தைப் பாருங்கள். ஒரு மயில் தனது இறகை விரித்துக்கொண்

டிருக்கிறது. அதுவே ஆண் மயிலாகும். மயிலின் இறகுக்குத் தோகை என்று பெயர். அந்த இறகில் பல நிறங்கள் இருக்கும். பளபளப்பான புள்ளிகளும் நிறைந்திருக்கும். இப் புள்ளிகள் கண்ணைப்போ லிருக்கும். ஆதலால் இவைகளுக்கு மயில் கண் என்று பெயர்.

மழைக் காலத்தில் கருமையான மேகங்களைக் கண்டால் இந்த ஆண் மயில் தன் தோகையை விரித்தாடும். அது பார்ப்பதற்கு மகிழ்ச்சியைத் தரும். மயில் ஆடும்போதன்றி மற்றக் காலங்களில் தனது தோகையைச் சுருக்கிக் கொள்ளும். தோகையிலுள்ள இறகுகள் உதிர்ந்துவிடும். நாளடைவில் முளைத்து வளரும். மயில் சாதாரணமாக உயரப் பறக்காது. பெண் மயிலுக்குத் தோகை யில்லை.

பெண் மயில் ஆணைப்போல அவ்வளவு பெரிதாகவும், அழகாகவும் இருக்காது. பெண் மயில் வருஷத்துக்கு ஒரு முறை இரண்டு முட்டைகள் இடும். அடைகாத்துக் குஞ்சு பொரிக்கும். இந்தக் குஞ்சுகள் வளர்ந்து பெரிய பறவைகளாக ஓங்குவதற்கு இரண்டு ஆண்டுகள் செல்லும்.

மயிலுக்குக் கழுத்து நீண்டிருக்கும். அதன் தலை சிறியது. தலையில் அழகான

கொண்டை இருக்கும். அதன் அலகு உறுதியாய் நீண்டிருக்கும். கால்கள் உயரமானவை.

ஒவ்வொரு காலிலும், முன்புறத்தில் மூன்றும், பின்புறத்தில் ஒன்றும் ஆக நான்கு விரல்கள் உண்டு. இந்த விரல்களுக்கு மேல் பின்புறத்தில் சிறு விரல் ஒன்று உண்டு. இதன் உதவியால் மயில் தன்னோடு வரும் பறவைகளையும் மிருகங்களையும் குத்தித் துரத்தித் தன்னைப் பாதுகாத்துக் கொள்ளும்.

மயில் உரத்த குரலுடன் கத்தும். அதற்கு அகவுதல் என்று பெயர். அந்தக் குரல் கேட்பதற்கு இனிமையாக இருக்காது.

மயில் புழு பூச்சிகளையும், தானியங்களையும், தளிர்களையும் தின்னும். பாம்புகளைக் கண்டால் அது விடாது. அது தன் கூரிய அலகினால் கொத்திக் கொன்று விடும். அதனால் மயில் இருக்கும் இடங்களில் பாம்புகள் இரா.

மயிலைச் சிலர் கொன்று தின்பார்கள். அதன் இறகுகளினால் அழகிய விசிறிகள் செய்வார்கள். மருத்துவர் அந்த இறகை மருந்தாக உபயோகிப்பார்கள். மயிலின் கொழுப்பிலிருந்து ஒருவித எண்ணெய் எடுப்பார்கள். அதுவும் ஒருவித மருந்தாகும்.



# 29. தமிழ் நாடு

பிள்ளைகளே ! நீங்கள் பேசுவது என்ன பாஷை ? தமிழ்ப் பாஷை. நீங்கள் படிக்கின்ற இந்தப் புத்தகம் என்ன புத்தகம் ? தமிழ்ப் புத்தகம். நமது மொழி தமிழ் மொழி. ஆதலால் நாம் தமிழில் பேசுகிறோம். தமிழ்ப் புத்தகங்களைப் படிக்கிறோம். தமிழ் என்றால் இனிமை என்பது பொருள். நீங்கள் பேசுகின்ற சொற்களைக் கேட்டு உங்களது பெற்றோர்கள் எவ்வளவு மகிழ்ச்சி அடைகின்றார்கள் !

மாணுக்கர்களே ! நீங்கள் இந்தப் பால வாசகத்தைப் படிப்பதனால் என்னபயன் ? நீங்கள் திருத்தமாகப் பேசவும், எழுதவும் தெரிந்து கொள்ளப் படிக்கின்றீர்கள். நமது தமிழ் மொழியில் இன்னும் பல அருமையான புத்தகங்கள் இருக்கின்றன. பாலர்களாகிய நீங்கள் பெரியவர்களாகும் வரையிலும் இப்புத்தகங்களைப் படித்து அறிவிலும் பெரியவர்களாவீர்கள்

தமிழ் மொழியைப் பேசுபவர்கள் தமிழர். தமிழ்மக்கள் வெகுகால முதற்கொண்டே கல்வியிலும், ஒழுக்கத்திலும் சிறந்து மேலாக விளங்கியிருந்தனர். ஒருவரையொருவர் அதிக அன்புடன் நேசித்து வாழ்ந்து வந்தார்கள்.

பெரியவர்களை வணங்கி வந்தார்கள். மரியாதையுடன் நடந்து வந்தார்கள். ஒருவர்க்கொருவர் உதவிபுரிந்து வந்தார்கள்.

தமிழ்மொழி பேசப்படும் நாடு தமிழ்நாடு என்று சொல்லப்படும். தமிழ் நாட்டைத் தமிழகம் என்று சொல்லுவார்கள். இந்தத் தமிழ் நாட்டிற்கு வடக்கே திருப்பதி மலை. தெற்கே கன்னியாகுமரி முனை. கிழக்கிலும் மேற்கிலும் கடல். இந்த நான்கு எல்லைக்குட்பட்ட நாடே நமது தமிழ் நாடாகும். நமது தமிழ்நாடு நீர்வளம் மிக்கது. நிலவளம் முதலிய பலவளங்களும் பொருந்தியது. வானளவு ஓங்கி யுயர்ந்த காடுகளுண்டு. உயரமான மலைகளுண்டு. காவிரி யாறு, பெண்ணை யாறு, பாலாறு முதலிய ஆறுகளையுடையது. இவ்வாறுகளை அடுத்துள்ள நிலங்கள் நன்செய் நிலங்கள் எனப்படும். இந்த நிலத்தில் விளையும் தானியம் நன்செய்த் தானியம் எனப்படும். நமது நாட்டில் இத்தானியங்கள் ஏராளமாக விளைகின்றன. புன்செய் நிலங்களும் உண்டு. அதில் விளையும் தானியங்களுக்குப் புன்செய்த் தானியங்கள் என்று பெயர். தென்னை, கமுகு, கரும்பு முதலியன ஏராளமாகப் பயிராகின்றன.

இந்தத் தமிழ்நாட்டைப் பண்டைக்காலத்தில் மூன்று அரசர்கள் ஆண்டு வந்தார்கள்.

அவர்களுக்குச் சேரன், சோழன், பாண்டியன் என்று பெயர். இவ்வரசர்கள் ஆண்ட நாட்டிற்குச் சேரநாடு என்றும், சோணுடு என்றும், பாண்டிநாடு என்றும் பெயர். இந்த நாடுகளில் பல நகரங்கள் உண்டு. அந்த நகரங்கள் மதில்களால் சூழப்பெற்றிருக்கும். அழகான சிறந்த கோவில்களு முண்டு.

**'நமது நாட்டிற்கு நாம் உழைப்போமாக'**



# 30. பயிர்த் தொழில்

மக்கள் பல தொழில்களைச் செய்து வாழ்நாள் கழிக்கின்ருர்கள். ஏதேனும் ஒரு தொழிலைச் செய்யாவிடில் உலகில் வாழ இயலாது. உழைக்காவிடில் உண்பதற்கு உணவு கிடைக்காது. உடுக்க உடை இராது. ஆதலால் ஒவ்வொருவரும் உழைத்தே தீரவேண்டும். ஒரு சிலர் பயிர்த்தொழில் செய்கிருர்கள். இவர்களுக்கு வேளாளர் என்று பெயர். சிலர் வியாபாரம் செய்கிருர்கள். இவர்களுக்கு வியாபாரிகள் என்று பெயர். சிலர் கைத்தொழில் செய்கிருர்கள். இவர்களுக்குத் தொழிலாளிகள் என்று பெயர். ஒரு சிலர் கணக்கு எழுதுவார்கள். இவர்களுக்குக் கணக்கர் என்று

பெயர். சிலர் பிள்ளைகளுக்குக் கற்பிப்பார்கள். அவர்களுக்கு ஆசிரியர் என்று பெயர்.

இப்படிப்பட்ட பல தொழில்களிலும் உயர்வான தொழில் பயிர்த்தொழிலே. ஏனெனில் நாம் பயிர்த்தொழில் செய்யாவிடில் பசி தீர உண்ணமுடியாது. உண்ணும் உணவிற்குப் பின்னேதான் ஆடைகளும் மற்றவைகளும் வேண்டுவனவாகும். நமது உயிருக்கு ஆதாரம் உணவே. ஆதலினால் உணவை விளைவிக்கும் உயர்ந்த தொழிலே உத்தமத் தொழிலாகும். இதை நமக்கு அறிவிக்க வேண்டியே ஒளவையாரும் "பயிர்த் தொழில் செய்," "மேழிச் செல்வம் கோழை படாது" என்று அறிவித் திருக்கின்றார். ஆதலால் பயிர்த் தொழிலைப்பற்றி நாம் சிறிது ஆராய்வோம்:—

பயிர்த் தொழிலை உழவுத் தொழிலென்றும் கூறுவர். நாம் பயிரிடும் பயிர் இரண்டு வகைப்படும். அவை : நன்செய்ப் பயிர், புன்செய்ப் பயிர் எனப்படும். நெற்பயிரை நன்செய்ப் பயிர் என்பார்கள். நன்செய்ப் பயிர் உண்டாகும் நிலம் நன்செய் நிலம் எனப்படும். கம்பு, கேழ்வரகு, சோளம் முதலிய பயிர்களைப் புன்செய்ப் பயிர் என்பார்கள். புன்செய்ப் பயிர் உண்டாகும் நிலம் புன்செய் நிலம் எனப்படும். நன்செய் நிலம் பெரும்பாலும் ஆறு முதலிய நீர் நிலைகளைச் சார்ந்திருக்கும்.

அறுவடையான வயல்களில் எருக்களைச் சேர்த்து வைத்திருப்பார்கள். மழைக்காலம் வந்தவுடன் வாய்க்கால்களை வெட்டித் தண்ணீர் விட்டு உழுவார்கள். மறுபடியும் நீரைத் தேக்கி மண்ணை மிருதுவாக்குவார்கள். இவ்வாறு நிலத்தை உழுவதற்குக் கருவியாக இருப்பது கலப்பை. நமது நாட்டுக் கலப்பைகள் மிகுதியாக மரத்தாலானவை. மேனாட்டுக் கலப்பைகள் இரும்பாலானவை. நமது நாட்டில் உள்ள உழவர்கள் மரக்கலப்பையைக் கொண்டே நிலத்தை உழுவார்கள்.



இந்த மரக்கலப்பைகள் அதிக ஆழமாக உழுவதற்குப் பயன்படா. மேலாக உழவு இருக்கும். ஆதலால் ஆழத்திலுள்ள உரமான

மண் மேல் வருவதற்கு இடமில்லை. மிகுந்த பலனும் கிடைப்பதில்லை. இதனால் நாளுக்கு நாள் வேளாண் தொழிலும் குன்றுகிறது.

இவ்வாறு கலப்பை கொண்டு உழுதபின் வயலிலுள்ள புல்பூண்டுகளை அப்புறப்படுத்துவார்கள். பூமியைச் சமப்படுத்துவார்கள். இதற்குப் பரம்படித்தல் என்று பெயர். பிறகு நெல்லை விதைக்க அது முளைத்துப் பயிராகும். இப்பயிர் சுமார் பத்து அல்லது பன்னிரண்டு அங்குலம் வளரும். பிறகு அதை வேரோடு பறித்து இரண்டு மூன்றாகச் சேர்த்து பண்படுத்தப்பட்ட நிலத்தில் நடுவார்கள்.

பின், தினமும் நீர் பாய்ச்சுவதுடன், வடிகாலின் வழியாக நீரை வெளியில் போக்கவும் செய்வார்கள். நாற்றுகளுக்கிடையில் புல் பூண்டுகள் முளையும். அவற்றைப் பிடுங்கி எறிந்து விடுவார்கள். இதற்குக் களை பறித்தல் என்று பெயர். இவ்வாறு களை பறிக்காவிடில் புற்கள் ஓங்கி வளர்ந்து பயிர்களை ஓங்கச் செய்யா. நெற்பயிர் இரண்டடி முதல் ஐந்தடி உயரம் வரையில் வளரும். நெற்பயிர் தொடக்கத்தில் பசுமை நிறமா யிருக்கும். அது முதிர்ந்த பின் பழுப்பு நிறமாகும்.

நெற்பயிரில் மணிகள் முற்றினால் தலை சாய்ந்துவிடும். குடியானவர்கள் அதை

அறிந்து ஆட்களுடன் சென்று தாள்களை அறுத்துக் கட்டாகக் கட்டிக்கொண்டுபோய்க் களத்தில் சேர்ப்பார்கள். பின் அவற்றைக் கட்டுகளாக வாரிக் களத்தில் அடித்து நெல்லை வேறாகவும் வைக்கோலை வேறாகவும் பிரிப் பார்கள்.

பிரித்த நெல்லைத் தூற்றி ஒன்று சேர்த்து அளப்பார்கள். அவற்றை அளந்து கணக்குப் பார்த்து, வேலையாட்களுக்குக் கூலி கொடுப் பார்கள். மீந்ததை வண்டியிலேற்றி வீடு சேர்த்து சுற்றத்தோடு உண்டு மகிழ்ந்திருப் பார்கள். இப்படிப்பட்ட வேளாளரே சிறந்தோ ராவர்.

**'நெற் பயிர் விளை'**



# 31. கிராமபோன்

பாலர்களே! நம்மவர்களில் சிலர் சாதா ரணமாகப் பாடுவார்கள். சிலர் பாடுவதில் கை தேர்ந்தவர்களா யிருப்பார்கள். ஒரு சிலர் பிடில், வீணை, புல்லாங்குழல் முதலிய வாத்தி யங்களை வாசிப்பதில் தேர்ச்சி பெற்றவர்களா யிருப்பார்கள். இவ்வாறு பாட்டுப் பாடுவதி லும், வாத்தியங்களை வாசிப்பதிலும் வல்லவர்

களை நம்மவர்கள் சங்கீத வித்துவான்கள் என்றழைக்கின்றனர்.

இவர்களுடைய சங்கீதமானது நமது மனதுக்கு மிகுந்த மகிழ்ச்சியைத் தரும். ஆதலால் இப்படிப்பட்ட வாத்தியங்களில் வல்லவர்களை வீடுகளில் வரவழைத்துக் கேட்பதன் பொருட்டு நம் முன்னோர் அவர்களுக்கு மிகுந்த பணம் கொடுத்து வந்தார்கள். நாமும் அதிகப் பணம் கொடுத்து வருகின்றோம். ஆனால் சில காலமாக நமது நாட்டில் ஒருவிதமான பாடும் பெட்டி ஒன்று வந்திருக்கிறது. இப்பெட்டி வந்த பிற்பாடு நாம் மிகக் குறைந்த செலவில் சங்கீதத்தைக் கேட்டு வருகிறோம். அதிகப் பணம் கொடுத்துச் சங்கீத வித்துவான்களைத் தேட வேண்டிய கஷ்டம் இல்லாது போயிற்று. அவர்களும் சில வேளைகளில் நமது பிரியம்போல் நமக்குக் கிடைப்பதும் இல்லை.

நம்மிடத்தில் இப்படிப்பட்ட ஒரு பாடும் பெட்டி இருந்தால் நாம் நினைத்த நேரத்தில் சங்கீதம் கேட்கலாம். நமக்குச் செலவும் இராது. குறைந்த செலவில் பல சிறந்த வித்துவான்களது பாடல்களைக் கேட்கலாம். இந்தப் பெட்டிக்கு "கிராமபோன்" என்று பெயர். இவ்விதமான பெட்டி பலவிதமான

பாட்டுகளையும் பாடும். அந்நிய நாடுகளில் பல பெரியார் செய்த பல பிரசங்கங்களை யெல்லாம் நமது வீட்டில் இருந்தே கேட்கலாம். இப்பொழுது பலவித நாடகங்களையும் நாம் இப் பெட்டியின் மூலம் கேட்டு மகிழலாம்.

இப் பெட்டியைத் திறந்து பார்த்தால் உள்ளே ஒரு இயந்திரம் இருப்பதைப் பார்ப்பீர்கள். அது ஒரு கடிகார இயந்திரம் போலிருக்கும். பெட்டியின் விலாப் புறத்தில் ஒரு கைப் பிடி இருக்கிறது. நாம் அதைச் சுழற்றிச் சாவி கொடுத்தால் பெட்டிக்குள் இருக்கும் விசை முடுக்கப்படும். இந்த விசை, பெட்டியின் மேலிருக்கும் வட்டமான தட்டைச் சுழலும்படி செய்யும். மேலுள்ள தட்டு சுழலுவதைக் காண்பீர்கள்.

பெட்டியின் பின்பக்கத்தில் இணைக்கப்பட்டிருக்கும் ஒரு குழாயையும் அதனோடு சேர்ந்துள்ள ஒரு சிறு கருவியையும் பாருங்கள். இந்தப் பெரிய குழாயைப் "புனல்" என்பார்கள். அந்தச் சிறு கருவியை "ஒலிப் பெட்டி" என்பார்கள். சில கிராமபோன் பெட்டிகளுக்கு புனல் இராது.

பெட்டியின் மேலுள்ள தட்டில் ஒலித் தட்டுக்களை வைக்கவேண்டும். இத் தட்டுக்கள் அரக்கினால் செய்யப்பட்டவை. அவற்றில்

வட்டமான கோடுகள் நெருங்கி யிருக்கும். தட்டை வைத்துச் சாவி கொடுத்தவுடன் தட்டு சுழலும். பிறகு ஒலிப் பெட்டியில் கிராம போன் ஊசியை வைக்க வேண்டும். ஊசி யின் முனையைத் தூக்கித் தட்டின் முதற் கோட்டில் வைக்கவேண்டும். உடனே தட்டுக ளுக்குத் தக்கவாறு ஒலி கேட்கும்.

மேற் கூறிய தட்டில் பலவகை யுண்டு. சில வாய்ப் பாட்டுப் பாடும் தட்டுக்கள். சில வேடிக்கைத் தட்டுக்கள்; சில பலவித வாத்தி யத் தட்டுக்கள். சில பேச்சுத் தட்டுக்கள். சில நாடகக் கதைகளா யிருக்கும். நாம் எந்தத் தட்டை வைக்கிறோமோ அந்தத் தட்டிலுள்ள பாட்டைக் கேட்போம். இந்தக் கிராமபோன் பெட்டி நமது மனதுக்கு மகிழ்ச்சியைத் தரும் ஒரு கருவி யல்லவா?



## 32. உலோகங்கள்

பிள்ளைகளே! உங்களில் சிலர் கைகளில் காப்பு அணிந்திருக்கிறீர்களே, அது எதனால் செய்யப்பட்டது தெரியுமா? அதுதான் தங் கம். அதைப் பொன் என்றும் சொல்வார்கள். சில பிள்ளைகள் காலில் காப்பு அணிந்திருக்

கின்றார்க ளல்லவா? அது வெள்ளியால் செய்யப்பட்டது. இந்தப் பொன் வெள்ளி முதலியவைகளுக்கு உலோகங்கள் என்று பெயர். இந்த உலோகங்கள் எவ்வாறு நமக்குக் கிடைக்கின்றன? இவைகள் பூமியிலிருந்து வெட்டி எடுக்கப்படுகின்றன. இவைகள் வெட்டி எடுக்கப்படும் இடம் சுரங்கம் அல்லது கனி என்று சொல்லப்படும்.

பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம், இவ்வைந்தும் பஞ்ச உலோகங்கள் எனப்படும். இவைகளன்றி இன்னும் பல உலோகங்களும் உண்டு. அலுமினியம், துத்தநாகம், நிக்கல் முதலியனவும் உலோகங்களே. பாதரசம் சாதாரணமாகத் திரவ வடிவமாகவே இருக்கும். கல்லும், நிலக்கரியும், இவை போன்ற மற்றவையும் பூமியிலிருந்து கிடைப்பனவே. ஆனால் இவைகள் உலோகப் பொருள்களாகாவாம்.

பொன் வெள்ளி முதலிய உலோகங்கள் தனி உலோகங்களாம். ஆனால் பித்தளை, வெண்கலம் முதலியன தனி உலோகங்களல்ல. இரண்டு பங்கு செம்பும், ஒரு பங்கு துத்தநாகமும் சேர்த்து உருக்கியது பித்தளையாகும். செம்பும், வெள்ளீயமும், சிறிது துத்தநாகமும் கலந்து உருக்கி வார்த்தது வெண்கலமாகும்.

இவ்வாறு கலந்து உண்டாகும் உலோகங்கள் கலப்பு உலோகங்க ளெனப்படும்.

இந்த உலோகங்கள் சுரங்கங்களிலிருந்து வெட்டி எடுக்கப்படும் பொழுது மற்றப் பொருள்களோடு சேர்ந்தே இருக்கும். தனித்த பொருளாகக் கிடைப்பதில்லை. கலப்புள்ள உலோகத் துண்டுகளை எடுத்து பெரிய உலை களில் வைத்துக் காய்ச்சி, மற்றப் பொருள் களையும் அசுத்தங்களையும் வேறு பிரித்து தனி உலோகத்தை எடுப்பார்கள். நமது நாட்டில் அதிக சுரங்கங்கள் இல்லை. அதனால்தான் உலோகங்கள் வெளி நாடுகளிலிருந்து வரு கின்றன.

இந்தப் பஞ்சலோகங்களில் பொன்னும் வெள்ளியும் விலையுயர்ந்த உலோகங்கள். இவை பளபளப்பா யிருக்கும். துருப் பிடிக்கா. களிம்பும் ஏருது. ஆதலால் நாம் அணிந்து கொள்ளும் நகைகளையும் பாத்திரங் களையும் பொன்னாலும் வெள்ளியாலும் செய்து கொள்ளுகிறோம். மற்ற உலோகங்களைவிட இவை பளுவுள்ளவை.

செம்பு மங்கிய சிவப்பு நிறமுள்ள ஓர் உலோகம். இதற்குத் தாம்பிரமென்றும் பெயர். இது பொன் வெள்ளி இவைகளைவிட எளிதில் மிகுதியாக அகப்படுவதால் குறைந்த விலையுள்

ளது. இதைத் தகடுகளாக்கித் தவலை, குடம் முதலிய பாத்திரங்கள் செய்கிறார்கள். செம்பில் அதிசீக்கிரத்தில் களிம்பு பிடிக்கும். இக்களிம்பு விஷம் போன்றது. ஆதலால் உணவுப் பாத்திரங்களுக்கு வெள்ளீயம் பூசி வைப்பது உத்தமம்.

இரும்பு எல்லா உலோகங்களையும் விட மிகவும் உபயோகமுள்ள உலோகம். இது சீக்கிரம் துருப்பிடித்துக் கெடும். ஆதலால் இதற்கு ஒருவித எண்ணெய் பூசுவார்கள். இரும்பினால் சிறிய ஊசி முதல் பெரிய இயந்திரம் வரை பலவித சாமான்கள் செய்யலாம். உருக்கிய வெள்ளீயத்தில் இரும்புத் தகடுகளைத் தோய்த்துத் தகரம் செய்யலாம். இரும்பில் சிறிது கரி சேர்த்துக் காய்ச்சினால் எஃகாகும். இந்த எஃகு இரும்பைவிட மிகவும் உறுதியுள்ளது.

ஈயம், வெள்ளீயம் என்றும் காரீயம் என்றும் இருவகைப்படும். வெள்ளீயம் மங்காதிருக்கும். காரீயம் கறுத்து விடும். வெள்ளீயத்தால் செய்யப்பட்ட பாத்திரம் கைத்துப் போகாது. காரீயப் பாத்திரம் கைத்துப் போகும். ஆதலால் வெள்ளீயத்தால் பாத்திரங்கள் செய்கிறார்கள். காரீயத்தால் அச்செழுத்துக்களும், துப்பாக்கிக் குண்டுகளும் செய்யப்படுகின்றன.

துத்தநாகத் தகடுகளால் குடம், தோண்டி முதலியன செய்யலாம். கூரை போடவும் உபயோகப்படும். அலுமினியத்தால் பாத்திரங்கள் செய்கிறார்கள். அது மிக எளிதாயும் விலை சகாயமாயும் இருக்கும்.



## 33. நல்ல சிநேகம்

ஒருநாள் ஒரு வேடன் கையில் வலையோடு ஒரு காட்டிற்குச் சென்றான். அங்கு ஓரிடத்தில் பறவைகளைப் பிடிப்பதற்காகத் தன் வலையை விரித்து, தானியத்தை அதில் தெளித்துவிட்டு தூரத்திலுள்ள ஒரு மர நிழலில் மறைந்திருந்தான்.

சிறிது நேரத்திற்குள் புறாக் கூட்டம் ஒன்று அங்கு வந்தது. அவ்விடத்தில் சிந்திக் கிடக்கும் தானியத்தைக் கண்டு அவற்றைப் பொறுக்க எண்ணின.

அப்போது அவற்றோடு வந்த ஒரு புறா வரசு மற்றப் புறாக்களைப் பார்த்து, “நீங்கள் இந்தத் தானியத்தை எடுக்கலாகாது. இந்தக் காடு மனித சஞ்சாரமற்றது. இதில் இந்தத் தானியம் எப்படி வரும்? யாரேனும் வஞ்சகமாகக் கொண்டுவந்து போட்டிருக்க வேண்

டும். இதைப்பற்றி நன்ருக யோசித்த பிறகு இரை எடுக்க வேண்டு”மென்றது.

அதைக் கேட்டுக்கொண் டிருந்த கருவமுள்ள மற்ருெரு புரு, “நாம் இப்படி ஒவ்வொரு இரையைப் பற்றியும் ஆலோசித்துக் கொண் டிருந்தால் நமக்கு ஒன்றும் அகப்படாது” என்றது. இதைக் கேட்ட மற்றப் புருக்களெல்லாம் திடீரெனப் பறந்து சென்று வலையில் உட்கார்ந்து தானியத்தைத் தின்னத் தொடங்கின. உட்கார்ந்த வுடனே எல்லாம் வேடனுடைய வலையில் சிக்கிக்கொண்டன.

அதைக் கண்ட புருவரசு துக்கித்து, ‘இவர்கள் நமது சொல்லைக் கேளாது போய் வலையில் அகப்பட்டுக் கொண்டார்கள். நாம் மாத்திரம் தனித்திருந்து பயனில்லை’ என்று சொல்லித் தானும் போய் வலையில் அகப்பட்டுக் கொண்டது. மற்றைய புருக்கள் வருந்துவதைக் கண்டு மனம் சகிக்காமல் அவர்களுக்கு உதவிசெய்ய எண்ணி, “ஓ புருக்களே ! நீங்கள் பயப்படாதீர்கள். நாம் இப்பொழுது ஒரு மனதாய் யாவரும் திடீரென்று பறக்க வேண்டும்” என்றது. அதைக் கேட்ட புருக்களெல்லாம் சரேலென்று ஒன்றுகூடி பறக்கலுற்றன. வலையையும் தம்மோடு தூக்கிச் சென்றன.

அதனைக் கண்ட வேடன் அதிசயங் கொண்டு புருக்களைத் தொடர்ந்து நெடுந்தூரம்

ஓடினான். அப்புருக்க ளெல்லாம் கண்ணுக் கெட்டாத தூரம் பறந்து மறைந்து போயின. வேடனும் துக்கத்தோடு வீடு சென்றான்.

பறந்து சென்ற புருக்க ளெல்லாம் ஒரு எலியின் வளையண்டை இறங்கின. அந்த எலி அந்தப் புரு அரசருக்குச் சிநேகிதன். அந்த எலி புருவரசைக் கண்டதும் மனமகிழ்ந்தது. ஆனால் அது வலையில் அகப்பட்டுக் கொண்டதைக் கண்டதும் வருந்தியது. மனம் பதைத்தது. பிறகு விரைவாகத் தனது கூரிய பற்களால் அவ் வலையைக் கடித்து அப் புருக்களை விடுவித்தது. புருக்க ளெல்லாம் மன மகிழ்ந்து அவ்வெலியைக் கொண்டாடிச் சென்றன.

பிள்ளைகளே! எலியின் நல்ல குணத்தை அறிந்தீர்களா! புருக்களின் துன்பத்தைப் போக்கிய எலியைப் போல நீங்களும் நல்ல நண்பர்களாய் இருக்க வேண்டும். உங்கள் சிநேகிதர்களுக்கு நேரும் துன்பத்தைப் போக்க வேண்டும். யாவரும் அன்போடு கூடி வாழ வேண்டும்.





# 34. புலி

புலி ஒரு கொடிய பிராணி. புலியை நீங்கள் சர்க்கஸ்களிலும் படங்களிலும் பார்த்திருப்பீர்கள். இவைகள் காடுகளில் வசிக்கும்.

புலி பூனையின் இனத்தைச் சேர்ந்தது. புலிக்கும் நமது வீடுகளிலுள்ள பூனைக்கும் பலவகையில் ஒற்றுமையுண்டு. ஆதலால் பூனையை இற்புலி என்பார்கள். புலியைக் காட்டுப்பூனை என்றழைப்பார்கள். புலிக்குப் பூனையைப் போலவே இரவில் கண் தெரியும்.

புலி பூனையைப் போல நகங்களை யுள்ளே இழுத்துக் கொள்ளும். பூனையைப் போல புலியும் தன் இரைமீது பதுங்கிப் பாயும். பூனைக்கிருப்பது போலவே புலிக்கும் மீசை மயிருண்டு. ஆனால் பூனையைவிட புலிக்குப் பெரிய தலையும், பருத்த உடலும், அதிக பலமும் உண்டு. புலி மாமிசத்தையே புசிக்கும். பூனை எல்லாம் புசிக்கும். பூனை மரங்களின்மேல் ஏறும். புலியோ ஏறாது. பூனை தண்ணீரில் இறங்காது. புலியோ பயமில்லாது இறங்கும்.

புலி உஷ்ணமான தேசங்களிலே வாழும். தென்னாப்பிரிக்கா, இந்தியா, சீனம் முதலிய இடங்களிலுள்ள காடுகளில் அவை மிகுதியும் உண்டு. நமது இந்தியாவில் மலையாளம், வங்காளம் முதலிய இடங்களிலும் மிகுதியும் உண்டு.

புலியில் இரண்டுவகை யுண்டு. பெரும் புலிக்கு வேங்கை என்று பெயர். சிறு புலிக்குச் சிறுத்தை என்று பெயர். இது மஞ்சள் நிறத்தோடு கரும் புள்ளிகளும் கலந்து இருக்கும்.

வேங்கை சிறுத்தையை விடப் பெரியது. அது சுமார் எட்டு அடி நீளமும், நான்கடி உயரமும் இருக்கும். சில வேங்கைகள் பதி

ஞறடி நீளமுள்ளனவா யிருக்கும். அவை களுக்குப் பதிஞறடி வேங்கைகள் என்று பெயர். அவைகளின் உடல் மஞ்சள் நிறத் தோடு கருமையான கோடுகளேயு முடையது. இந்தக் கோடுகள் இருப்பதால் அதைக் கொடு வரி என்றழைப்பார்கள். அதன் தலே பெரி தாயும் உருண்டையாயும் இருக்கும். கண்கள் மிகவும் பிரகாசமா யிருக்கும்.

புலியின் முகம் பார்ப்பதற்குப் பயங் கரமா யிருக்கும். புலியின் பற்கள் இரண்டு வரிசையாய் அமைந்திருக்கும். அப் பற்கள் மாமிசத்தைக் கிழிப்பதற்குத் தக்கதாய் கூர்மை யாயும் உறுதியாயும் இருக்கும். அதன் நாக்கு சொர சொரப்பா யிருக்கும். அதன் உடலில் மெல்லிய உரோமங்கள் உண்டு. அடிவயிறு வெளுத்திருக்கும். புலியின் கால்கள் பலமுள் ளவைகளாயும் குட்டையாயும் இருக்கும். புலி யின் கால்நகங்கள் நீண்டு வளேந்து கூர்மையா யிருக்கும்.

புலி மாமிச பக்ஷணி. "புலி பசித்தாலும் புல்லேத் தின்னுது" என்றபடி அது புல் பூண்டுகளேத் தின்னுது. அது பகற் காலங் களில் புதர்களில் படுத்துறங்கும். மாலேயில் இரைதேடப் புறப்படும். புலி நீர் குடிக்க வரும் ஆடு, மாடு, மான் முதலிய விலங்கு

களைக் கொன்று தின்னும் பொருட்டு, அந்த நீர்த்துறைகளின் பக்கத்தில் பதுங்கியிருக்கும். புலி தான் கொன்ற பிராணியைப் பலநாள் வைத்துத் தின்னும். வேட்டை யாடுவோர் இதனை அறிந்து இறந்த பிராணி கிடக்கும் பக்கத்தில் பதுங்கி யிருந்து புலியைச் சுடு வார்கள்.

புலி காட்டுக்கு அருகில் உள்ள ஊரில் புகுந்து மனிதரைத் தூக்கிக் கொண்டுபோய்க் கொன்று தின்னும். அது தன்னை எதிர்த்த மனிதர்களைக் கொல்லாமல் விடாது. புலி மனிதர்களது மாமிசத்தின் சுவையைக் கண்டு விட்டால், அடிக்கடி மனிதரையே கொன்று தின்னும்.

புலி வேட்டை மிகவும் பயங்கரமானது. சிலர் யானைமேலிருந்து புலியை வேட்டை யாடுவதும் உண்டு. புலியை உயிருடன் பிடித் துச் சர்க்கஸ் காட்சிகளில் பல வேலைகள் செய்யும்படி பழக்கி வைத்திருக்கிறார்கள். அவர்களிடத்தில் அது மிகவும் பணிவாக அடங்கியிருக்கும். நமது நாட்டில் சிலர் புலி யின்தோலை ஆசனமாக உபயோகிக்கின்றார்கள். புலி நகங்களையும் ஆபரணமாக அணிவார்கள். புலிப் பல்லைக் கத்திப்பிடியாக உபயோகிப்பது உண்டு.

# 35. கடிதம்

வடக்கு வீதி, புதுவை,
15-3-1935.

அன்புடைய தம்பி இராமலிங்கத்துக்கு இறைவன் அருளால் நலங்கள் பலவும் உண்டாகுக. இங்கு யாவரும் நலமே. அவ்விடத்திய நலத்தை அறிய மிகவும் ஆசை.

நீ எழுதிய கடிதம் கிடைத்தது. நீ செவ்வையாகப் படித்து வருவதை அறிந்து மகிழ்ச்சி யடைகிறேன். இவ்வாண்டில் நடந்த பரீட்சையில் முதல் வகுப்பில் தேறினதற்கு அறிகுறியாகப் பல வெகுமதிகள் பெற்றதற்கும் மிகவும் ஆநந்திக்கின்றேன். ஆயினும் உனக்குச் சில புத்திமதிகளை இக்கடிதத்தின் மூலமாக அறிவிக்க விரும்புகின்றேன்.

நீ பாடம் படிப்பதில் முதன்மையாய் இருப்பது போலவே ஓடுதல் முதலிய தேகப்பயிற்சி விளையாட்டிலும் முதன்மையாய் இருப்பதைக் கேட்க மிகவும் மனமகிழ்ச்சி யடைகின்றேன். ஆயினும் விளையாடக்கூடிய வேளைகளில் விளையாடல் வேண்டும். படிக்கும் நேரங்களில் படிக்க வேண்டும். உன்னைப்போன்ற நல்ல பிள்ளைகளோடு கூடி விளையாட வேண்டும். அவர்களையே நேசிக்க வேண்டும். உனக்குப் போதிக்கும் உபாத்தியாயர்களிடத்தில் பயபக்தியோடு அடக்கமாக ஒழுகவேண்டும். "மூத்தோர் சொல் வார்த்தை அமிர்தம்"

என்றபடி அவர்கள் சொல்வதைப் பொன் மொழிகளாகக் கொண்டு போற்றவேண்டும். வருகிற ஜனவரிப் பண்டிகை விடுமுறைக்கு நீ இங்கு வந்து சேரவும். உனது தாயார் தம்பிகள் உன்னைக் காணவேண்டுமென்று ஆசையுடன் இருக்கின்றார்கள்.

இங்ஙனம்

உனது அன்புள்ள அண்ணன்,

திருமலை.

**விலாசம் :—**

சிரஞ்சீவி

இராமலிங்கம், 4-வது வகுப்பு,

தேசீயக் கலாசாலை, திருசிரபுரம்.



# 36. செய்யுள் பாடம்

அதிவீரராம பாண்டிய ரியற்றிய

வெற்றிவேற்கை யென்று வழங்கப்படும்

## நறுந்தொகை

1. எழுத்தறி வித்தவன் இறைவ னாகும்.
2. கல்விக் கழகு கசடற மொழிதல்.
3. செல்வர்க் கழகு செழுங்கிளை தாங்குதல்.
4. மன்னவர்க் கழகு செங்கோல் முறைமை.
5. வணிகர்க் கழகு வளர்பொருள் ஈட்டல்.
6. உழவர்க் கழகு உழுதூண் விரும்பல்.
7. மந்திரிக் கழகு வரும்பொருள் உரைத்தல்.
8. தந்திரிக் கழகு தறுகண் ஆண்மை.
9. உண்டிக் கழகு விருந்தோ டுண்டல்.
10. குலமகட் கழகுதன் கொழுநனைப் பேணுதல்.
11. அறிஞர்க் கழகு கற்றுணர்ந் தடங்கல்.
12. வறிஞர்க் கழகு வறுமையில் செம்மை.
13. தேம்படு பனையின் திரள்பழத் தொருவிதை
வானுற வோங்கி வளம்பெற வளரினும்
ஒருவர்க் கிருக்க நிழலா காதே.

14. தெள்ளிய ஆலின் சிறுபழத் தொருவிதை
தெண்ணீர்க் கயத்துச் சிறுமீன் சினையினும்
நுண்ணிதே யாயினும் அண்ணல் யானை
அணிதேர் புரவி ஆட்பெரும் படையொடு
மன்னர்க் கிருக்க நிழலா கும்மே.

15. பெரியோர் எல்லாம் பெரியரும் அல்லர்.
சிறியோர் எல்லாம் சிறியரும் அல்லர்.

16. பெற்றோர் எல்லாம் பிள்ளைகள் அல்லர்.
உற்றோர் எல்லாம் உறவினர் அல்லர்.

17. ஒருநாள் பழகினும் பெரியோர் கேண்மை
இருநிலம் பிளக்க வேர்வீழ்க் கும்மே.

18. நூறாண்டு பழகினும் மூர்க்கர் கேண்மை
நீர்க்குள் பாசிபோல் வேர்க்கொள் ளாதே.

19. பெருமையும் சிறுமையும் தான்தர வருமே.

20. சிறியோர் செய்த சிறுபிழை எல்லாம்
பெரியோர் ஆயின் பொறுப்பது கடனே.

21. சிறியோர் பெரும்பிழை செய்தனர் ஆயின்
பெரியோர் அப்பிழை பொறுத்தலும் அரிதே.

22. கற்கை நன்றே கற்கை நன்றே
பிச்சை புகினும் கற்கை நன்றே.

23. கல்லா ஒருவன் குலநலம் பேசுதல்
நெல்லினுள் பிறந்த பதரா கும்மே.

24. எக்குடிப் பிறப்பினும் யாவரே யாயினும்
அக்குடியில் கற்றோரை வருக என்பார்.

25. அறிவுடை ஒருவனை அரசனும் விரும்பும்.

26. யானைக் கில்லை தானமும் தருமமும்.

27. பூனைக் கில்லை தவமுந் தயையும்.

28. ஞானிக் கில்லை இன்பமும் துன்பமும்.

29. அச்சமும் நாணமும் அறிவிலோர்க் கில்லை.

30. உடைமையும் வறுமையும் ஒருவழி நில்லா.

31. குடை நிழல் இருந்து குஞ்சரம் ஊர்ந்தோர்
நடைமெலிந் தோரூர் நண்ணினும் நண்ணுவர்.

32. சிறப்பும் செல்வமும் பெருமையும் உடையோர்
அறக்கூழ்ச் சாலை அடையினும் அடைவர்.

33. அறத்திடு பிச்சை கூவி இரப்போர்
அரசோ டிருந்தரசு ஆளினும் ஆளுவர்.

34. எழுநிலை மாடம் கால்சாய்ந் துக்குக்
கழுதை மேய்பாழ் ஆகினும் ஆகும்.

35. பெற்றமும் கழுதையும் மேய்ந்த அப்பாழ்
பொற்றொடி மகளிரும் மைந்தரும் செறிந்து
நெற்பொலி நெடுநகர் ஆயினும் ஆகும்.

36. இல்லார் இரப்பதும் இயல்பே இயல்பே.
இரந்தோர்க் கீவதும் உடையோர் கடனே.

37. தறுகண் யானை தான்பெரி தாயினும்
சிறுகண் மூங்கில் கோற்கஞ் சும்மே.

38. கொடுங்கோல் மன்னர் வாழு நாட்டில்
கடும்புலி வாழும் காடு நன்றே.

39. சான்றோர் இல்லாத் தொல்பதி இருத்தலின்
தேன்தேர் குறவர் தேயம் நன்றே.

40. முதலுள பண்டங் கொண்டு வாணிபஞ்செய்
ததன்பயன் உண்ணு வணிகரும் பதரே.

41. வித்தும் ஏரும் உளவாய் இருப்ப
எய்த்தங் கிருக்கும் ஏழையும் பதரே.

42. தன்னாயுதமும் தன்கைப் பொருளும்
பிறன்கையில் கொடுக்கும் பேதையும் பதரே.

43. பொய்யுடை ஒருவன் சொல்வன் மையினால்
மெய்போ லும்மே மெய்போ லும்மே.

44. மெய்யுடை ஒருவன் சொலமாட் டாமையால்
பொய்போ லும்மே பொய்போ லும்மே.

45. துணையோ டல்லது நெடுவழி போகேல்.

46. புணைமீ தல்லது நெடும்புனல் ஏகேல்.

47. வழியே ஏகுக வழியே மீளுக.

48. வாழிய நலனே வாழிய நலனே.



Printed at the 'Caxton Press,' Madras — 1939. (C)

Caxton Press, Madras.